சென்னைப் பதிவு என் கடு௦௬ ௧௬ பக்கங்கள் தந்தி விலாசம்:—"ஊழியன்"

# ஊழியன்

## The "Oolian," a Nationalist Weekly.

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

நல்லவை வாழ்க! அல்லவை ஆழ்க!

மலர். ௧௧. } காரைக்குடி, பிரசோற்பத்தி-ஹூ ஆனி-மீ ௧௬-௨ செவ்வாய்க்கிழமை. { இதழ் ௧௫

சென்ற வெள்ளிக்கிழமை மாலை மணி ௬-௩0 க்கு காரைக்குடி காந்தி சவுக்கத்தில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் தலைவரும் ஊழியன் ஆசிரியருமான திரு. ராய. சொக்கலிங்கன் அவர்கள் "காரைக்குடியில் நடைபெறும் அநீதியான மறியல்" என்ற தலைப்போடு "உண்மையுறைக்கும் தேசாபிமானி" என்ற கையெழுத்துடன் வெளியிடப்பட்டுள்ள துண்டுப்பிரசுரத்திற்குப் பதிலளிக்கையில் கூறியதாவது:—

"இன்று இக்கூட்டம் எதற்காகக் கூடப்பட்டிருக்கிறது என்பது உங்களுக்கு ஏற்கனவே அறிவிக்கப்பட்டிருக்கிறது. தற்பொழுதும், அதன் காரணம் 'சென்ற நாற்பது நாட்களாகக் காரைக்குடியில் நடைபெறும் அநீதியான மறியல்' என்ற பெயரோடு வெளிவந்திருக்கிற துண்டுப் பிரசுரத்திற்குத் தக்க பதிலளிப்பதற்கேயாகும் என்பதைத் தொண்டர்படைத் தலைவரும், அவைத்தலைவரும் உங்களுக்கு எடுத்துக் கூறினர். உண்மைப் பெயரை வெளியிடப் பயந்து அச்சிடப்பட்டிருக்கும் கேவலம் ஓர் துண்டுப்பிரசுரத்தைப் பெரிதாகக் கருதி இக்கூட்டம் போட்டதாக எண்ண வேண்டாம். இதுபோன்று பதினாயிரக் கணக்கான துண்டுப்பிரசுரங்கள் தோன்றினும் அவற்றைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. ஆனால், "உண்மையுறைக்கும் தேசாபிமானி" என்று அநாமதேயக் கையெழுத்திட்டிருப்பவர் உண்மையிலேயே தேசாபிமானியாகவிருக்கலாம் என்று பலர் ஐயுறலாம். ஆனால், அத்துண்டுப் பிரசுரம் போட்டவர் உண்மைத் தேசாபிமானியல்ல—அவர் ஓர் பெரிய தேசத்துரோகி என்பதை நாங்கள் அறிவோம். ஆதலால் அதனை விளக்கி அத்துண்டுப் பிரசுரத்தில் கூறப்பட்டிருப்பவை ஒவ்வொன்றிற்கும் பதில் சொல்லவே இங்கு வந்திருக்கிறோம்."

இவ்வாறு கூறித்துண்டுப் பிரசுரம் முழுவதையும் வாசித்தார். பின்னர் அதற்குப் பதில் கூறுகையில் பேசியதாவது. "அன்பர் திருகூடசுந்தரம் அவர்களை நீங்கள் எல்லோரும் அறிவீர்கள். சிறிது காலமாக இங்கு எத்தகைய காங்கிரஸ் வேலையும் செய்யப்படாது இருந்தது. அப்பொழுது அவர்கள் இங்கு வந்து நம்மிடையே காங்கிரஸ் உணர்ச்சியை உண்டு பண்ணினர். இத்துண்டுப் பிரசுரத்தில் அவர் காங்கிரஸ் வேஷம் போட்டிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அவர் எந்த வேஷம் போட்டிருக்கிறார்? பல ஆண்டுகளாக அவர்கள் எந்த வேலையைச் செய்து வந்தார்களோ அதே வேலையைத்தான் தற்பொழுதும் செய்து வருகிறார். அதேவிதமான கதராடையைத்தான் இன்றும் கட்டியிருக்கிறார். ஆதலால், அவர் வேஷம் போட்டு வந்திருக்கிறார் என்பதற்குப் பொருள் என்ன? இனி, காரியதரிசி என்ற பெயர் தாமாகவே சூட்டிக்கொண்டதாகக் கூறப்படுகிறது. காரியதரிசி என்ற பெயரை அவர் தாமாகச் சூட்டிக்கொள்ளவில்லை. அவர் காங்கிரசிற்காகச் செய்த அரிய தொண்டினைப் பாராட்டி காரைக்குடி ஜில்லாவாசிகள் அவருக்களித்த ஸ்தானமது. அன்றியும் காரியதரிசிப் பட்டம் திவான்பகதூர், ராவ்பகதூர் போன்ற பட்டமல்ல. பொது ஜனத்தொண்டு யார் புரிகின்றார்களோ அவர்களுக்கு இத்தகைய பதவியளிக்கப்படும். காரியதரிசியின் வேலையும் தொல்லையும் சிறிதல்ல. சங்கங்களில் காரியதரிசியாக விருந்தவர்களுக்கே இவ்வேலையால் ஏற்படும் துன்பம் தெரியவரும்.

# காரைக்குடி அயலாடைமறியல்.

## அநியாயப் பழிகளுக்கு மறுப்பு.

(திரு. ராய. சொக்கலிங்கன் சொற்பொழிவு.)

இனி, காங்கிரசின் பெயரால் ஏராளமான பணவசூல் கொழும்பிலும், செட்டிமார் நாட்டிலும் செய்து அதனைத் தமது சொந்த உபயோகத்திற்காகப் பயன்படுத்தி வருவதாகச் சொல்லியிருக்கிறது. கொழும்பு சம்பந்தமாக வசூல் செய்த பணத்திற்குக் கணக்கு இருக்கிறது. அது காரைக்குடியின் சமீபத்திலுள்ள ஓர் செட்டியாரிடம் கொடுத்து வைக்கப்பட்டிருக்கிறது. அப்பணத்தைக்கொண்டு திருநெல்வேலியில் காங்கிரஸ் நிர்மாண வேலை செய்ய உத்தேசித்திருக்கிறார். இது பற்றிய முழு விபரமும் பல பத்திரிகைகளில் சமீபத்தில்வெளியிடப்பட்டிருக்கிறது. செட்டிமார் நாட்டில் வசூலான பணத்திற்குச் சரியான வரவு செலவுக் கணக்குகள் வெளியிடப்பட்டு வந்திருக்கின்றன. இந்த பணத்திலிருந்துதான் தற்பொழுது மறியலுக்கு வேண்டும் பொருள் உதவப்படுகிறது. இச்செலவுகளையும் அவர்கள் சொந்தமாகச் செய்வதில்லை. அதற்கென ஓர் கமிட்டியிருக்கிறது. அக்கமிட்டியாரோடு கலந்தே ஒவ்வொரு காரியத்தையும் செய்துவருகிறார். காந்தியடிகள் இப்பகுதியில் வந்தபொழுது ௩௪ ஆயிர ரூபாய் வசூலாயிற்று. இந்தப் பணத்தை அவர் கொள்ளைகொண்டு போனார் என்று சொன்னால், அதற்கு ஏதாவது பொருள் உண்டா? அன்பர் திருகூடசுந்தரம் பிள்ளையோடு நெருங்கிப் பழகியவர்கள், அவர் இப்பணத்தைச்சொந்தச் செலவுக்காக எடுப்பதில்லை என்பதை அறிவார்கள். மேலும், அவர்களுக்கு இவ்வூரில் சொந்தவேலை என்ன இருக்கிறது? காலையில் எழுந்தது முதல் இரவு தூங்கும்வரை அவர்களுக்கு காங்கிரஸ் வேலை தவிர வேறு எதுவும் இங்கே கிடையாது. அவர்கள் இங்கு வந்து இவ்வாறு செய்து வருவது இப்பகுதியார் செய்த தவப்பயன் என்றே சொல்லவேண்டும். ஆதலால், இங்கு வசூலான பணத்திற்கு அவர் சொந்தச் செலவிற்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. அங்ஙனமாக, கண்டபடி எழுதுவதற்கு எவ்விதப் பொருளுமில்லை. ஏதேனும் தவறு இருந்தால் நியாயவாயிலாக நேரில் வந்து கூறலாம். அவ்வாறு கூறுவோருக்கு இம்மேடையிலேயே இடமளிக்கின்றேன்.

அவர் சொந்த வேலைக்காகக் கார் வைத்திருக்கிறார் என்று எழுதப்பட்டிருக்கிறது. அவர் சொந்தவேலை காங்கிரஸ் வேலைதான். அவர் கார் வைத்திருப்பது அந்நிய ஜவுளியை அடியோடு ஒழித்தற்காகவேதான். கார்வைத்திருப்பதால் மிக விரைவில் சௌகரியமாக ஒவ்வொரு ஊர்களுக்கும் போய்ப் பிரசாரம் செய்யமுடியும். இவ்வாறு பல காங்கிரஸ்தாபனங்களில் கார் வைத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. காந்தியடிகள் தமிழ் நாட்டில் சுற்றுப்பிரயாணம் செய்தபொழுது அவர்களுக்குத் தனியாக ஓர் மோட்டார் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆதலால் சொந்த வேலைக்காகக் கார் வாங்கியிருக்கிறார் என்பதற்குப் பொருளேயில்லை. இது முழுதும் பொய்யானதொன்று.

இன்னும், 'இவரைப்பற்றிய விஷயங்கள் பத்திரிகைகளில் வெளிவந்திருக்கின்றன. அவை எல்லோருக்கும் தெரிந்த விஷயம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. யாரைப் பற்றிவேண்டுமானாலும் ஏராளமாக என்ன வேண்டுமானாலும் எழுதிவிடலாம்; அதனை அச்சிட்டுவிடலாம். தக்சான்றுடன் தவறு, இன்னதென்பதைக்கூற அறிஞர்களுக்கே முடியும். பெயரில்லாத மொட்டைக் கடிதங்களும் மொட்டைத்துண்டுப்பிரசுரங்களும் வெளியிட ஆண்மையாளர் எவரும் முன் வரமாட்டார்கள்; அறிவாளர்கள் ஒருவரும் துணியார். இவ்வாறு எழுதுவதற்காக அவர்கள் அவதூறு வழக்குப் போடமாட்டார்கள். எந்த யோக்கியப் பொறுப்புள்ள—கௌரவம் வாய்ந்த பத்திரிகையும் அவ்வாறு எழுதவும் துணியாது. மொட்டைத் துண்டுப் பிரசுரத்திற்குச் சமமான சில யோக்கியப்பொறுப்பற்ற பத்திரிகைகள் எழுதுவதற்காக, நாம் கவலை கொள்ளத்தேவையுமில்லை.

இனி, பள்ளி மாணவர்களும் விளையாட்டுச்சிறுவர்களும் மறியலுக்காகக்கொணர்ந்து நிறுத்தப்படுகிறார்கள் என்று எழுதப்பட்டிருக்கிறது. எங்காவது மாணவர்கள் அல்லது சிறுவர்கள் மறியல் செய்யக்கூடாதென்ற விதியிருக்கின்றதா? மாணவர்களும் சிறுவர்களுமே நிரம்ப மறியல் செய்யக்கூடியவர்களாகவிருந்தால் அவர்கள் மறியல் புரிவதில் என்ன தடையிருக்கிறது? எனக்கு முன்னர் பேசிய சிறுவனே மறியல் புரிவதில் சிறந்தவன் என்று நான் கேள்விப்படுகிறேன். ஆதலால், சிறுவர்கள் மறியல் செய்கிறார்கள் என்பதில் எத்தகைய தவறுமில்லை.

ஜவுளி வாங்க வருபவரிடம் தொண்டர்கள் விளையாடுகிறார்களாம். தொண்டர்கள் என்ன செய்கிறார்கள்? வருகிறவர்களிடம் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகிறார்கள்; கும்பிடுகிறார்கள்; கதரையே கட்டுங்கள் என்று வேண்டிக்கொள்கிறார்கள். இனி, தொண்டர்களுக்கு மறியல் செய்யும் பயிற்சியில்லை என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. தொண்டர்கள் மறியல் செய்கிறார்கள். அந்நிய ஜவுளி வியாபாரம் ஆகவில்லை. மறியலின் நோக்கம் வியாபாரத்தைத் தடைசெய்வதே. அங்ஙனமாக, மறியல் செய்து வியாபாரம் தடைப்பட்டுவிட்டதென்றால், இதைவிட மறியலுக்கு வேறு வெற்றி எதற்கு? நாங்களும் இப்பொழுது மறியல் செய்துவிட்டுத்தான் இங்கு வருகிறோம். நாங்கள் மறியல் செய்த காலத்தில் சுமார் ஒரு ரூபாய்க்குத்தான் விற்பனை நடந்ததாகத்தெரியவந்தது.

(அடுத்த பக்கம் பார்க்க.)

# காரைக்குடி அயலாடை மறியல்.

## அநியாயப் பழிகளுக்கு மறுப்பு.

(௧-ம் பக்கத் தொடர்ச்சி.)

நூற்றுக்கணக்காக வியாபாரமாகவேண்டும் ஒருபெரியபுடவைக்கடையில் இவ்வாறு விற்பனை குறையத் தொடங்கிவிட்டால் அவர்களுக்கு வயிற்றெரிச்சல் தோன்றுவது சகஜம்தான். இதனால் அந்தப்புடவைக் கடை வியாபாரி இதனை அச்சிட வெளி வந்தார். ஜவுளி வியாபாரிக்கும் காங்கிரசுக்கும் எவ்வித சம்பந்தமாவது உண்டா? கிடையாது. யார் வைதாலும், அடித்தலும் பொறுத்துக்கொள்வது தொண்டர்கள் கடமை; இவர்களை அடிப்பதும் உதைப்பதும் புடவைக்கடைக்காரர்கள் கடன்! அங்ஙனமாக, புடவைக்கடைச் செட்டியாருக்கும் காங்கிரசிற்கும் என்ன சம்பந்தம்? இவ்வாறு நான் ஏன் சொல்கின்றேன்? "உண்மைத்தேசாபிமானி" என்று கையெழுத்திட்டு இத்துண்டுப்பிரசுரம் போட்டவர் மகா-ா-ா-ஸ்ரீ மெ, வெ, லெ, வெங்கிடாசலம் செட்டியாரே யாவர். (வெட்கம்! வெட்கம்!! என்ற ஆவாரம்) இதற்குத்தக்க சான்றுகள் இருக்கின்றன. அவருக்கும் எமக்கும் எவ்விதப்பகைமையும்கிடையாது. அன்பர் திருகூடசுந்தரருக்கும் இவ்வியாபாரிகளிடம் எவ்விதப் பகைமையுமில்லை. ஆனால் நாட்டுக்குத் துரோகம் செய்யும் அந்நியத்துணியை விற்கக்கூடாதென்று தடுக்கும் பொருட்டே இந்த மறியல் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. நான் அந்நிய ஜவுளி வியாபாரம் செய்தாலும் என்னையும் தலைவர் அவர்கள் இந்த மாதிரியே கண்டிப்பார்கள். ஆதலால், வியாபாரம் விழுந்துவிட்டது என்ற காரணத்தால் கண்டபடி எழுதுவதற்குப் பொருளில்லை.

அடுத்தபடியாக, தொண்டர்கள் கட்டாயப்படுத்தி யழைத்துவரப் படுகிறார்கள் என்று சொல்லப்படுகிறது. நீங்கள் யாவரும் மறியல் செய்வதைப் பார்த்திருக்கின்றீர்கள். அவர்களில் ஒருவரேனும் கட்டாயப்படுத்தித் தொண்டராகச் சேர்க்கப்பட்டார்என்று சொல்ல முடியுமா? அப்படி, யாராவது இருந்தால் தைரியமாகச் சொல்லலாம். அவ்விதம் எதுவும் கிடையாது. தங்களைத் தொண்டர்களாகச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று நாடோறும் பலர் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறார்கள். நன்றாக ஆராய்ந்து பார்த்தே ஒவ்வொரு தொண்டரும் சேர்க்கப்படுகிறார். ஆதலால் இவ்விஷயம் பொய்! பொய்! முழுப்பொய்! வியாபாரம் பட்டு விட்டதே என்ற ஆத்திரத்தால் தூண்டப்பட்ட புடவைக்கடை செட்டியார் எழுதிய பொய்!

அடுத்தபடியாக 'தொண்டர்கள் பலாத்காரம் செய்கிறார்கள். பெண்கள் இந்தப் பக்கம் செல்வதற்கே யோக்யதை யில்லாத நிலைமையிலிருக்கிறது' என்று சொல்லப்படுகிறது. இன்னும் தொண்டர்கள் பேரில் பலகுறைகள்கூறப்பட்டிருக்கின்றன. ஆனால் இன்ன தொண்டர் இன்ன தேதியில் இன்ன கடைமுன் இவ்வாறு நடந்துகொண்டார் என்று சொல்லப்படவில்லை. நாங்கள் பத்திரிகையில் இன்ன செட்டியார் அடித்தார், எச்சிலை உமிழ்ந்தார் என்று குறிப்பிட்டு எழுதுகிறோம். அவ்வாறு உண்மையாக நடந்திருந்தாலல்லவா இவர்கட்கும் எழுத முடியும்? ஆதலால் இதுவும் பொய். நான் பார்த்த வரையில்-கேட்டவரையில்-தொண்டர்கள் மிகச்சாந்தமாகவே கும்பிட்டுக்கேட்டுக் கொள்ளுகிறார்கள். கடைக்குள் போகக்கூடாது என்று சொல்லுவதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. 'இந்தக் கடையில் வாங்காதீர்கள். இங்கே அந்நியத்துணி விற்கப்படுகின்றது' என்று சொல்லத்தான் அங்கே நிற்கின்றார்கள். ஆதலால் அவ்வாறு சொல்லத்தான் செய்வார்கள்.



'தமிழ்நாட்டு அந்நிய ஜவுளிப் பகிஷ்கார சபைத் தலைவரான திரு. பாஷ்யம் அவர்கள் காரைக்குடியிலேயே அந்நிய ஜவுளி மறியல் மிக வெற்றிகரமாக நடைபெறுகின்றதென்று கூறியுள்ளார். தொண்டர்கள் செய்யும் அநீதிகளை எல்லாம் தலைவர் திருகூடசுந்தரம் கேட்டு மகிழ்வதாகக் கூறப்பட்டிருக்கிறது. தொண்டர்கள் அடிபடுகிறார்கள். ஏச்சுப் பேச்சுகளைப் பொறுமையுடன் கேட்டுக் கொள்ளுகிறார்கள். பெண் தொண்டர் ஒருவரைப் புடவைக்கடைசெட்டியார்களில் ஒருவர் தகாத முறையில் மிகக் கேவலமாகப் பேசினார். இவை யாவற்றையும் தொண்டர்கள் அமைதியாகச் சகித்துக் கொண்டார்கள். இத்துணை சாந்தமுடைய தொண்டர்களைப் போற்றாதிருக்க முடியுமா என்று கேட்கின்றேன்.

மறியல் தலைவர் தகாத முறையில் நடந்து கொள்கின்றார் என்றும் அவர் யோக்கியதை பத்திரிகை வாயிலாக வெளியிடப்பட்டிருக்கின்றனவென்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. யோக்யப் பொறுப்புள்ள எந்தப் பத்திரிகையில்—தகுதிவாய்ந்த எந்தப் பத்திரிகையில்—இவர்களை மிகக் கேவலமாக எழுதியிருக்கிறதென்று கேட்கிறேன். சிறுமைக் குணமிக்க சிலர்—யோக்யப் பொறுப்பற்றசிலர்—ஏதேதோஎழுதுகிறார்கள். அவற்றால் அவற்றை எழுதும் அவர்கள் சிறுமை வெளிப்படுமன்றி இவர்கள் பெருமை சிறிதும் குன்றிவிடாது.

தொண்டர் தலைவர்கள், தொண்டர்கள் வீடுகளில் கதர் நுழைவதில்லை என்று கூறப்பட்டிருக்கிறது. இதன் பொருள் விளங்கவில்லை. இவர்கள் கதரை வீட்டுக்குள் போகும் பொழுது வெளியே போட்டு விட்டுச் செல்கின்றார்கள் என்பதா, அல்லது வீட்டைவிட்டு வெளியே வந்துதான் கதரை வாங்கிக்கட்டிக்கொள்ளுகிறார்கள் என்கிறார்களா என்பது விளங்கவில்லை. இது பொருளற்றவொன்றாகவிருக்கின்றது.

காராச்சிக் காங்கிரசில் ஏதேதோ தீர்மானம் செய்ததாகப் புடவைக் கடைச் செட்டியார் குறிப்பிடுகின்றார். காராச்சிக் காங்கிரசிற்கும் அந்நிய ஜவுளி விற்கும் ஒருவருக்கும் என்ன சம்பந்தம்? காங்கிரஸ் அந்நிய ஜவுளி விற்பனையை அறவே ஒழித்துவிட வேண்டுமென்று கட்டளையிடுகின்றது. ஒரு அங்குல அந்நியத் துணிகூட இந்தியாவில் விற்பனையாக லாகாதென்று கூறுகின்றது. அந்நிய ஜவுளியை விற்றல் தேசத்திற்குச் செய்யும் பெரும் துரோகமென்றுரைக்கின்றது. ஆகலால், அந்நிய ஜவுளி விற்றல் இந்தியத் தாய்க்குச்செய்த பெரும் துரோகம். அதனை விற்பவர் பெரும் தேசத் துரோகி. இவ்வாறு அந்நியத் துணியை விற்பதினும் பெரிய தேசத்துரோகம் வேறு கிடையாது. அந்நிய ஜவுளியால் நாடு கெடுகின்றதென்பதற்காகவே இந்தியாமுழுமையும், தமிழ்நாடு முழுமையும் அந்நிய ஜவுளி மறியல் நடக்கின்றது. காரைக்குடியில் மட்டும் புதிதாக நடைபெறவில்லை.

'காங்கிரஸ் என்றால் தோசையா' என்று கேட்கத்தக்க நிலைமையில் அதற்குச் சிறிதுமே சம்பந்தமற்ற ஒருவர் காராச்சிக்காங்கிரஸ் தீர்மானத்தை எடுத்துச் சொல்வது பெரும் விந்தையாகவே இருக்கிறது!

கடைசியாக, இத்துண்டுப் பிரசுரம் தோன்றியதன் காரணம் வியாபாரம் பட்டுவிட்டதே என்றுள்ள வயிற்றெரிச்சல்தான் என்பதும் இதனை வெளியிட்டவர் தேசத் துரோகியாகிய ஒருவரே என்பதும் கூற விரும்புகிறேன். துண்டுத்தாளில் தவறுதலாக அச்சிடப்பட்டிருப்பினும் வாஸ்தவத்தில் உண்மை அதனை வெளியிட்டவருக்கு உறைக்கத்தான் (அதாவது காரமாயிருக்கத்தான்) செய்யும். ஆதலால் நீங்கள் அனைவரும் அந்த அந்நிய ஜவுளிக்கடைகளை எட்டியே பார்க்கலாகாதென்று கேட்டுக்கொள்ளுகிறேன். மறியல் செய்வது சேவையென்று எண்ணுது செட்டியார் சகோதரர்கள் யாவரும் தொண்டர்களாகச் சேர்ந்து மறியல் செய்யும்படியும் கேட்டுக் கொள்ளுகிறேன். —(நமது நிருபர்)

# ஒப்பந்தத்தை மீறும் மறியல்.

## மகாத்மாவின் எச்சரிக்கை.

மகாத்மா காந்தி இவ்வார "இளமை இந்தியா" வில் பின் வருமாறு எழுதுகிறார்:—

மறியலைப்பற்றிய ஒரு புகாரினின்றும் பின்வரும் விஷயத்தை எடுத்துக் குறிக்கிறேன்.—

"கிராமாந்தரங்களில், தொண்டர்கள் பலாத்காரமான சகல முறைகளையும் அனுஷ்டிப்பதாகத் திட்டமாக விளங்குகின்றது. வாங்கவருவோரைத் தடுக்கிறார்கள்; திட்டுகிறார்கள்; பொதுவாகத் தொந்திரவு செய்கிறார்கள். கள்ளுக் கடை ஏலமெடுத்தவர்களுக்கு மிகுந்த நஷ்டம் உண்டாக்கப்படுகிறது. சில சமயங்களில், அவர்களை மிகவும் அதைரியப்படுத்துகிறார்கள். இதனால், மேலும் பல அவமானங்களுக்கு ஆட்படாதிருக்க வெண்ணி, குறியிட்ட மரங்களிற் கள்ளிறக்குவதை நிறுத்தி, தங்கள் கடைகளை அவர்கள் மூடிவிடுகிறார்கள். தெல்லிச்சேரியிலுள்ள காங்கிரஸ் காரியாலயத்தார் முக்கியக் கள்ளுக்கடை ஏலக்காரர்களைத் தங்கள் முன்வந்து ஆஜராகுமாறு அவர்களுக்குக் கட்டளை அனுப்பினார்கள். எந்தக் கடைக்காரருக்கும் இந்தக் கட்டளையை மீறத் தைரியமில்லை. ஆஜரான கடைக்காரர்களைக் கடைகளை மூடிவிட வேண்டுமென்று ஒரே வார்த்தையாய்க் கூறிவிட்டார்கள். அதற்கு கஷ்ட ஈடுவேண்டுமென்று அவர்கள் கேட்டார்கள். காங்கிரஸ் அவர்களுக்கு எவ்வுதவியும் செய்ய முடியாதெனக் காங்கிரஸ் காரியாலயத்தார் பதில் அளித்துவிட்டார்கள்."

இந்தப் புகார்கள் உண்மையாயின், இந்த மறியலை உடனே நிறுத்திவிட வேண்டும். இந்தப் புகார் என் கைக்கு வந்தவுடனே, இதில் உள்ள கூற்றுக்களைப்பற்றி விசாரித்து, ஓர் கடிதம் எழுதிவிட்டேன். என்றாலும், பொதுவாகச் சேவை செய்வோர்க் கெல்லாம் உதவியா யிருக்குமெனக் கருதி, இப் புகாரைப் பிரசுரித்திருக்கிறேன். ஜவுளி மறியல் சம்பந்தமாகக்கூட இதே மாதிரி புகார்கள் கிடைத்துள. இந்தப் பத்திரிகையில் நான் ஏற்கனவே விடுத்துள எச்சரிக்கையைத்தான் திரும்பவும் குறிப்பிட முடியும். மயக்கத் தரும் பானங்களாயினும், பொருள்களாயினும் சரி; அந்நிய ஜவுளிகளேயாயினும் சரி; அவற்றினை விலக்கும் இயக்கத்திற்கும், காங்கிரஸ் இயக்கத்திற்கும், டெல்லி ஒப்பந்த நிபந்தனைகளைச் சிறிதும் மீறுவதினும் மறியலை அடியோடு நாம் கைவிடலே மேலாகும் என்பதே அவ்வெச்சரிக்கை. மறியல் சாத்விகமா யிராவிட்டால், அதனை அடியோடு விட்டுவிட வேண்டும்.

பின்வரும் வழியே மிக அதிகப் பயன் தருவதெனக் கண்டுகொள்ளப்பட்டு வருகிறது. அதாவது வீட்டுக்கு வீடு செல்ல வேண்டும்; குடிகாரர்களையும் அபினி குடிப்போரையும் அந்நியத்துணி உடுப்பவரையும் அவரவர் வீடுகளிலேயே போய்ப்பார்க்க வேண்டும்; இம்மூன்று பொருள்களில் எதனை உபயோகித்தாலும் உண்டாகும் தீமையை அவர்களுக்கு விளக்கிச் சொல்லவேண்டும். வீதிகளின் மூலைகளில், சொற்பொழிவுகள் நிகழ்த்தலாம்; துண்டுப் பிரசுரங்கள் வழங்கலாம். சுதேசி, மதுவிலக்கு ஆகிய பாடல்களைப் பாடி "பிரபாத் பெரி" எனும் பஜனைகள் நடத்தியும் இந்தப் பிரசாரத்தைச் செய்யலாம். வீட்டுக்கு வீடு கதரைத் தூக்கிச் சென்று விற்று, ஆர்டர்களைப் பெறுவதன் மூலமும், சுயமாகக் கையால் நூற்ற நூலைக் கொண்டு நெசவுகள் நடத்த ஏற்பாடு செய்வதன் மூலமும் அந்நியத் துணிப் பகிஷ்காரத்திற்கு ஒத்தாசை புரியலாம். பிரதேச நிலைமையை இவ்வாறு சமனம் செய்தால், மதுவகைகள், லாகிரி வஸ்துக்கள், அந்நியத் துணிகள் ஆகியவற்றின் உபயோகம் நிச்சயம் பாதிக்கப்படும்.








# "நான் காங்கிரஸைப் பின்பற்றுவதேன்?"

## ஓர் கிருஸ்தவப் பாதிரியார் கூறுவது.

பாதிரி எல்வின், கிருஸ்தவ ஸேவா சங்கத்தைச் சேர்ந்தவர்; காங்கிரஸை ஆதரிப்பவர்; காந்தியடிகளிடம் பெருமதிப்பு உடையவர். இவர் பர்டோலிக்குச் சென்று எளிய ஜனங்களை நேரே கண்டு பேசுகிறார். அவர்களுடைய சமீபப் போராட்டத்திற்கு, அவர்களைப் போற்றுகிறார். காந்தியடிகளின் சத்தியாக்கிரக ஆசிரமத்திற்குச் சென்று, மீராபாய் என்ற மிஸ் ஸ்லேடு என்னும் மாதிடம் பஞ்சு வெட்டவும் நூல் நூற்கவும் கற்றுக்கொண்டவர். இவர் ஏன் காங்கிரஸ் கொள்கையை ஆதரிக்கிறார்? அதற்கு இவர்கூறிய பின்வரும் காரணங்கள் "இளமை இந்தியா"ப் பத்திரிகையில் காணப்படுகின்றன:—

(க) நான் ஓர் ஆங்கிலேயனாயிருப்பதால், இந்தியாவின் சுதந்திர உரிமையை ஆதரிக்கிறேன். ஆங்கிலேயனுக்கு அழகு, சுதந்திரத்தைக் காதலித்தலே. எனது நாட்டுச் சகோதரர் அநேகர் நான் 'தேசத் துரோகி'யாயிருப்பதாகக் கருதுகிறார்கள். ஆனால், அவர்களே உண்மையில் தேசத் துரோகிகளென்று நான் கூறுகிறேன். உண்மையில் ஆங்கிலேயரிடம் உள்ள சுதந்திரப் பேரிலட்சியத்திலிருக்கும் சிறந்த அம்சத்தை யெல்லாம் பக்தியுடன் அனுஷ்டிப்பவன் நானே. "உங்கள் நாடு அடக்கு முறைக் கொடுமைக்கு உட்பட்டிருந்தால், புரட்சிசெய்; அது இன்னோர் நாட்டை அடக்குமுறைக்கொடுமைக்குஉட்படுத்துமாயின், இன்னும் அதிகமாகப் புரட்சி செய்." உங்களுக்கு எவ்வளவு சுதந்திரமிருக்கிறதோ அவ்வளவு சுதந்திரத்தைப் பிறர்க்கும் நீங்கள் அளிக்காவிட்டால், சுதந்திரத்திற்குப் பொருள்தானென்ன?

(உ) இரண்டாவதாக, ஆங்கில நாட்டுக்கு, ஜீவிய வந்தராகவுள்ள யாவரினும் மிகச் சிறந்த நண்பர் காந்தியே யென நான் நம்புவதால், அவரை நான் பின்பற்றுகிறேன். அவருடைய நேர்மை பொருந்திய, நிராயுதமான கைகள், இங்கிலாந்தின் ஏகாதிபத்தியத்தை நாசம் செய்து விடப்போகின்றதென்பதை நான் அறிவேன். ஆனால், இங்கிலாந்தின், ஆன்மாவை அவரே இரட்சிக்கப்போகிறார் என்பதையும் நான் அறிவேன். இதைக் கவனியுங்கள்; தனி மனிதர்களைப்போலவே, நாடுகளுக்கும் ஆன்மாக்களுண்டு என்று நான் நம்புகிறேன். உங்களையும் என்னையும் போலவே, நாடுகளும் பாவங்களிழைக்க முடியும். நீங்களோ நானோ, நமது சகோதரரை அடிமைப்படுத்தினாலும் நெருக்கினாலும் கொள்ளை யடித்தாலும் பிழையாகுமாயின், ஒரு நாடு தனது சகோதர நாடொன்றை அடிமைப்படுத்தினும் நெருக்கினும் கொள்ளை யடிப்பினும் அதேமாதிரியே பிழையாகும். இந்தியாவை நெருக்கி, கொள்ளையடிக்கும் பாவத்தை இங்கிலாந்து புரிந்து வருகிறது. அந்தப் பாவத்தினின்றும் இங்கிலாந்தை விடுதலை பெறச்செய்ய வேண்டுமென்பது எனது ஆசை. இங்ஙனமாக, ஒரு நாடு இழைக்கக்கூடிய மிகக் கொடுந் தீமையினின்றும் அதனை இரட்சிக்கக் கூடிய ஒருவருக்கு நான் எவ்வாறு பக்தி செலுத்தாதிருக்க முடியும்? தேசீய அகத்தூய்மைக்காக நீங்கள் கைக்கொண்டிருக்கும் தொண்டு இந்தியாவோடு மட்டில் அமைந்துவிடாது; இங்கிலாந்தையும் அது இரட்சிக்கும்.

(ங) மூன்றாவதாக, இந்த நவீன கால உலகில், யுத்தத்தற்குப் பதிலாக உபயோகமாகக் கூடிய ஆயுதம் காங்கிரஸின் மாண்புமிக்க சத்தியாக்கிரகமே யென நான் காண்கின்றேனாதலால், காங்கிரஸை ஆதரிக்கிறேன். சத்தியாக்கிரகம் தோற்கடிக்க முடியாதது. மிக வலிமை பொருந்திய சேனையை எடுத்துக்கொள்ளுங்கள்; மிகக் கனத்த ஆயுதங்களைத் தாங்கிய யுத்தக் கப்பலை எடுத்துக்கொள்ளுங்கள்—அவை யெல்லாம், சத்தியாக்கிரக உணர்வு எவரிடம் பூரண பக்குவமடைந்துளதோ அந்த ஒரு மனிதரவ்வளவு வலிமைக்கு வலல். ஏனெனில், அன்பினும் அதிக் சக்தியுடைய தொன்றுமில்லை. ஒரு தாய்க்குத் தன் குழந்தையினிடம் உள்ள அல்லது ஒரு மனைவிக்குத் தன் கணவனிடம் உள்ள அன்பினும் அதிக சக்தியுடைய தென்னவிருக்கின்றது? குடும்பத்திற்குள் அடைத்துக்கிடந்த இம் மகத்தான சக்தியை, காந்தியடிகள் வெளியே எடுத்து, உலக அரசியலில் புகுத்திவிட்டார். சர்வதேசத் தொடர்புகளில் ஓர் கொள்கையாகச் சத்தியாக்கிரகத்தைக் கைக்கொள்ளும் பொழுது, ஓர் திகைப்பை உண்டாக்குகின்றது. ஏனெனில், அது எதிர்பாராமல் புதிதாகத் தோன்றியிருப்பதாலேயே ஓர் பகைவனின் பகைமையை ஆங்கிலேயர் விளங்கிக் கொள்ளுவர். அதை எப்படிச் சமாளித்துக் கொள்ளுவதென்பது அவர்களுக்குத் தெரியும். ஆனால், பகைவன் அன்பு செலுத்தும் பொழுது, ஆங்கிலேயர் திகைத்துப் போகிறார்கள். நீங்கள் தோல்வியைக் கோரினால், ஆங்கிலேயரைப் பகைக்கத் துவங்குங்கள். அப்பொழுது, உங்களுக்கு நல்ல சந்தர்ப்பம் வாய்க்காது. ஆனால், எங்கள் யாவருக்கும் எதிரே, எங்கள்மீது அன்பு செலுத்திக் கொண்டேயிருங்கள்; அப்பொழுது, உங்களுக்கு ஒரு கெடுதலும் நாங்கள் செய்ய முடியாது.

(ச) நான்காவதாக, காங்கிரஸ் எளிய மனிதர்களுக்குச் சொந்தமான சுயராஜ்யத்தை வரவேற்கப் போகின்றதென நான் நம்புவதாலேயே நான் அதனை ஆதரிக்கின்றேன். கராச்சிக் காங்கிரஸ் பிரஜா உரிமைகளைப்பற்றி நிறைவேற்றிய தீர்மானத்தைப் படித்த பொழுது எவ்வளவு சந்தோஷத்தையடைந்தேனோ, அவ்வளவு சந்தோஷத்தை நான் வேறெப்பொழுதும் அடைந்ததாக எனக்குத் தெரியவில்லை. 'நான் கனவு காணும் சுயராஜ்யம், ஏழைகளுக்குரிய சுயராஜ்யம்' என்று காந்தியடிகள் கூறினார். அந்தச் சுயராஜ்யத்திலே உண்மையான சமத்துவம் இருக்கும். அந்தச் சுயராஜ்யத்திலே 'தீண்டாதோர்' எவருமிரார். பொது ஜனங்களின் பணம், வைஸிராய் மாளிகைகளிலும், பிரம்மாண்டமான சேனைகளுக்கும் கொட்டியழிக்கப்படமாட்டாது. கல்விக்கும், வைத்திய உதவிக்கும், ஏழைகளின் வாழ்க்கையின் பாரத்தைக் குறைக்கவும் அப்பணம் உபயோகிக்கப்படும். அப்பொழுது, எல்லா மனிதரும் தாங்கள் சகோதரரே என உணர்வார்கள்.



# தற்பொழுதைய காங்கிரஸ் வேலை.

## செய்யவேண்டிய முறைகள்.

தமிழ்நாட்டில் காங்கிரஸ்தொண்டில் ஈடுபட்டிருக்கும் யாவருக்கும் தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு. சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியர் ஓர் விஞ்ஞாபனம் விடுத்துளார். சர்க்கார் எப்படி நடந்துகொண்டாலும், இர்வின்-காந்தி ஒப்பந்தத்தை நாம் மீறியதாகச் சொல்வதற்கு அணுவளவும் இடந்தரலாகாதென அதில் அவர் வற்புறுத்தியிருக்கிறார். காங்கிரஸ் வேலையைத் தற்பொழுது நடத்த வேண்டிய பின்வரும் சில முறைகளையும் அவர் வகுத்துரைத்துளார்:—

க. இனிமேல் இந்திய அரசாங்கமானது இந்திய மகா ஜனங்களுக்கே பொறுப்புள்ளதாயிருக்கும் என்று காந்தி-இர்வின் சமாதானத்தில் தெளிவாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறபடியாலும், தேசத்தில் சமாதான மனோபாவத்தை நிலைநிறுத்த உதவிபுரிவதாய் மகாத்மாஜி வாக்களித்திருக்கிறபடியாலும், தற்போது அரசாங்கத்தின் பழைய அநீதிகளையும் தவறுகளையும் எடுத்துக்காட்ட வேண்டிய அவசியமில்லை. ஆனால், பூரண சுயராஜ்யத்தின் அவசியத்தை நாம் நன்கு விளக்கிக் கூறலாம். பிரிட்டிஷாரின் தரப்பில் கோரப்படும் "பாதுகாப்பு" நிபந்தனைகளைத் தாக்கி, அவை தேச நன்மைக்குப் பாதகமானவை யென்பதை எடுத்துக்காட்டலாம். ராஜிப் பேச்சு ஒருவேளை முறிந்து மறுபடியும் போர் துவங்க வேண்டி வந்தாலும் தற்போது அரசாங்கத்தைப் பொதுப்படையாக நாம் தாக்காமலிருப்பதனால் எவ்வித நஷ்டமும் பலவீனமும் அடையமாட்டோம்.

உ. தற்போது எவ்விதச் சட்ட மறுப்பும் மகாத்மாவின் உத்தரவு இன்றி ஆரம்பிக்கக் கூடாது. ஆகையால் அதிகாரிகள் சட்டப்படி பிறப்பிக்கும் உத்தரவுகளை மீறி நடக்கக் கூடாது. அவைகளைப்பற்றி எனக்கு எழுதி மேல்நடவடிக்கைக்கு யோசனை கேட்கவேண்டும்.

ங. பின்வரும் விஷயங்களை நோக்கமாகக் கொண்டு பிரசாரம் நடத்த வேண்டும்:— (க) விதேசித் துணிப் பகிஷ்காரம்; (உ) மதுவிலக்கு; (ங) காங்கிரஸ் அங்கத்தினர் சேர்த்தல், நிதி திரட்டுதல்; (ச) காங்கிரஸ் கட்டுப்பாட்டை நிலைநிறுத்துதல்; (ரு) கதர் வளர்ச்சி, தீண்டாமை விலக்கு, சமூக ஒற்றுமை ஆகிய நிர்மாணத் திட்டங்களை நடத்திவைத்தல்.

ச. பிரிட்டிஷ் சாமான்களைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்று பிரசாரம் செய்யக்கூடாது. அன்னியத் துணிப் பகிஷ்காரப் பிரசாரந்தான் செய்ய வேண்டும்.

ரு. அன்னியத்துணி விஷயத்திலும் பிரிட்டிஷ் துணியை மட்டும் பகிஷ்கரிக்க வேண்டுமென்று பொருள் படும்படி பேசக்கூடாது. அன்னியத் துணி எல்லாவற்றையும் விலக்கிவிடும்படியே கேட்டுக்கொள்ள வேண்டும். கதர் இயக்கத்திற்கும் கைத்தறிகளுக்கும், ஜப்பான் நூலும் துணியும் பெரிய விரோதிகள் என்பதை மறந்துவிடக்கூடாது.

சு. விதேசித் துணிப் பகிஷ்காரத்தைப்பற்றிப் பேசும்போது, தேசத்தின் பொருளாதார முன்னேற்றத்துக்கும் கைத்தொழில் வளர்ச்சிக்கும் அது அவசியம் என்பதை எடுத்துக்காட்ட வேண்டும். கைத்தொழில் பாதுகாப்பில்லாத சுயராஜ்யத்தினால் பயனில்லையென்று விளக்கிக்கூறலாம். ஆனால் அரசியல் போரில் பிரிட்டிஷருக்கு நஷ்டமாக்கும் ஆயுதமாக அதைப்பற்றிக் குறிப்பிடக்கூடாது.

எ. சுதேசியைப்பற்றிப் பேசும்போது சுதேச ஆலைத்துணியைக் காட்டிலும் கைத்தறித் துணியே ஏழைகளைக் காப்பாற்றக்கூடியது என்பதை எடுத்துக்காட்ட வேண்டும். அதிலும் கதரே பூரண சுதேசியமும் காங்கிரஸ் திட்டமுமாகும் என்பதை வற்புறுத்த வேண்டும்.

அ. பலாத்காரச் செயல்களை ஆதரிப்பதாகப் பொருள்படும்படி ஒரு வார்த்தையும் பேசக்கூடாது. பலாத்காரச் செயல்கள் புரிந்தவர்களின் வீரத்தைப்பற்றியோ, தியாகத்தைப் பற்றியோ இப்போது நாம் புகழுரைகள் கூறுவது அநாவசியம். அத்தகையவர்களைப் பாராட்டும் கடமையை மகாத்மா காந்தி போன்றவர்களுக்கே விட்டுவிடுதல் நலம்.

கூ. மற்ற அரசியல் கட்சிகளையும் தலைவர்களையும் இழிவுபடுத்திப் பேசக்கூடாது. கூடியவரையில் மதுவிலக்கு அன்னியத்துணி விலக்கு முதலிய வேலைகளில் அவர்களுடைய உதவியைப் பெற முயலவேண்டும்.

௰. தேசியப் பாட்டுகளிலும் மேற்கூறியமுறைகளுக்கு மாறுபடாத கீதங்களையே தேர்ந்தெடுத்துப் பாட வேண்டும்.

சென்றவார "இளமை இந்தியா"வில் திரு. மகாதேவ தேசாய் எழுதியுள்ள வாசகத்தில் ஒரு பகுதி வருமாறு:—

# பண்டித ஜவஹர்லால்.

## இலங்கை விஜய வெற்றி.

### அயல்நாட்டவரும் கொண்டாடினர்.

### மரியாதைப் பிடிவாதம் விருந்தை நிறுத்தியது.

### வில்லம்புபோல் ஓடிவந்தார்.

பண்டித ஜவஹர்லால் நேரு. இலங்கையிலிருந்து பம்பாய்க்கு வந்து சேர்ந்ததும், காந்தியடிகளைச் சந்திப்பதற்காக, அவர் வில்லினின்றும் பாய்ந்த அம்புபோல், பர்டோலிக்குப் பறந்தோடி வந்தார். இலங்கையில் அவர் செய்த சிறிய சுற்றுப்பிரயாண காலம் பூராவிலும் அவசரமாகத் திரும்பி வருகையில் தென்னிந்தியாவிலும், அவருக்குக் கிடைத்த ஆர்வமிக்க வரவேற்புக்கும், நல்லெண்ணமும் அன்பும் நிறைந்த உபசாரங்களுக்கும் நிறைந்த நன்றியுடையவராயிருந்தார். பண்டித ஜவஹர்லால் காங்கிரஸுக்குள் மிக அமிதவாதிகளும் அடியோடு மாறுதல் செய்ய வேண்டுவோருமான சிறு பான்மைக் கட்சியைச் சேர்ந்தவர் என்று கூறுவதும், அவரை "அனலுமிழ்பவர்" எனவும் "தீயுண்போர்" எனவும் வர்ணிப்பதும் வழக்கம். அப்படிச் சொல்லுபவர், பின்வரும் சம்பவத்தையறிய, சந்தோஷத்தோடு கூடிய வியப்பை எய்துவர்.

### "இலங்கைக்கே புதுமை."

பண்டித ஜவஹர்லால் இலங்கையில் ஒரு மாதம் தங்கியிருந்தார். தமது கொள்கைச் சிறிதும் ஒளிக்காமல், ஏராளமான கூட்டங்களில் அவர் பேசினார். அவர் இலங்கைக் கரையை விட்டுப் புறப்பட்டபொழுது, அங்குள்ள இளைஞர் அவரைத் தெய்வமெனக் கொண்டாடினார்கள்; இந்தியரும் சிங்களரும் ஒருங்கே போற்றினார்கள். இது மாத்திரமல்ல; அயல் நாட்டினரும் வியந்து பாராட்டினார்கள். ஸிலோன் டைம்ஸ் பத்திரிகை, ஓர் நீண்ட கட்டுரையில் அவரைத் "திறமை மிக்கவரும் எங்கும் போற்றப்படுபவருமான" இந்தியர் என்று குறிப்பிட்டு, அவருக்கு அப்பத்திரிகை கூறிய பிரிவுபசாரமாவது:—"இத்தகைய மனம் கவரும் பிரசங்கமும், கூர்ந்த புத்திமதியும் உற்சாகத் தரதன; இவை இலங்கைக்குப் புதுமையுமானவை—இவ்வாறு தயக்கமின்றி நாம் கூறுவோம். இங்கே எதிர்பார்க்கப்பட்டவை அவையல்ல; ஆதலால், அத்துணைக் கத்துணை அவற்றை அதிகமாகப் பாராட்டுகிறோம். அவை நற்பயன் தரும் என்பதில் எமக்கு எவ்வித ஐயமுமில்லை; அவரது வேண்டுகோள்களின் பலன், சீக்கிரத்திலே உணரப்படும் என்றும் நாம் நம்புகிறோம். அவருக்கு நாம் பிரிவுபசாரம் சொல்லுகையில், ஓர் தீரமும் தேசபக்தியுமுடைய இந்தியருக்கு விடை கொடுக்கிறோம் என நாம் உணர்ச்சி கொள்கின்றோம்; அவருடைய அநேக நற்குணங்களை, இலங்கை இளைஞர் மாதிரியாகக் கொண்டு பின்பற்றி நடத்தல் நலமாகும்."

### வெற்றியின் ரகசியம்.

சகல கட்சிகளையும் சகல வகுப்புகளையும் சேர்ந்த மனிதரும் ஸ்திரீகளும் அவரை அன்போடு வரவேற்று, வழியனுப்பினார்கள். மைசூரில் அவர் ராஜாங்கத்தின் விருந்தினராயிருந்தார். அங்கே அவரை இதற்கு முன் ஒரு பொழுதும் அறிந்திராத ஓர் பெண்மணி, அவரை ஓர் விருந்துக்கு அழைத்தார். அவரை வழியனுப்பும் பொழுது, அப்பெண்மணி, சுயராஜ்யபவன ஆஸ்பத்திரிக்காக ஆயிர ரூபாய்க்கு ஓர் செக்கை அவரிடம் கொடுத்தார். நாட்டில் அவர் செய்த விஜயம்பெற்ற வெற்றியின் இரகசியம், தெடிதே தேடிக் கண்டுபிடிக்க வேண்டியதல்ல. அவர் சொல்லுவதெல்லாம், செய்வதெல்லாம், ஆண்மையுடன் கலந்த உண்மை ஊக்கம் ஆகியவற்றின் முத்திரையைத்தாங்கியவையாயிருக்கின்றன. அவற்றை எதிர்த்தலோ, தவறாக உணர்தலோ கடினமாகும்.

### அரசருக்கும் வேண்டாம், எனக்கும் வேண்டாம்.

கொழும்பு நகரத்தில் உள்ள, ஐரோப்பியருள்படப் பல பெரிய மனிதர்களும், பண்டித ஜவஹர்லாலைக் கௌரவிப்பதற்காக ஓர் விருந்துக்கு ஏற்பாடு செய்தார்கள். எல்லா ஏற்பாடுகளும் பூர்த்தியாகச் செய்தாகிவிட்டது. அவருடைய சம்மதத்தைப் பெறுவதற்காக, அவரிடம் வந்தார்கள். அவர் நன்றியுடன் தமது சம்மதத்தைத் தெரிவித்தார். ஆனால், விருந்துக்கு ஏற்பாடு செய்தவர்கள் அவரிடம் விடை பெறுமுன், பின்வரும் விஷயத்தை அவரிடம் தெளிவாகத் தெரிவித்தார்கள். இலங்கையின் வழக்கப்படி, மூன்று மரியாதை செலுத்துவது வழக்கமாம். முதல் மரியாதை அரசருக்கு; இரண்டாவது மரியாதை கவர்னருக்கு; மூன்றாவது மரியாதை விருந்தினருக்கு. இந்த விஷயம், பண்டித ஜவஹர்லாலுக்குக் கஷ்டமாயிருந்தது. "எனக்கு மரியாதை சொல்லிப் பருகும் பானமுன்பட, மூன்று பானங்களையும் விட்டு விடுங்கள்" என்று அவர் யோசனை கூறினார். ஆனால், இந்த யோசனையை ஏற்பது அவர்களுக்குக் கஷ்டமாயிருந்தது. அதனால், விருந்தே கைவிடப்பட்டது. ஆனால், எவரும் அவர்மீது தப்பபிப்பிராயம் கொள்ளவில்லை. ஏனெனில், அவருடன் நெருங்கிப் பழகிய எவரும் அவர் ஒன்றிலும் இரகசியம் செய்வதில்லை யென்றும், தங்களை ஏமாற்ற எவ்விதத் தந்திரத்தையும் அவர் அனுஷ்டிக்கமாட்டார் என்றும் அறிந்து கொண்டார்கள்.

### சகலமும் அரசியலே.

அவருடைய கண்டிப்பிரசங்கம் பெரிதும் பாராட்டப்பட்டது. அதில் அவர் கூறியதாவது:—"அநேகஜனங்கள் எண்ணுவதுபோல, இயல்பிலேயே நான் ஓர் அரசியல் மிருகமல்ல. சாதாரண அரசியல் அல்லது பொது ஜன சேவை வாழ்வு எனக்குப்பிடிக்கவில்லை. ஆனால் இந்தியாவையும் இலங்கையையும் போன்ற நிலைமைகளையுடைய நாடுகளிலே, நாம் விரும்பினும் விரும்பாவிடினும், நம்மிற் பலரும் அரசியலுக்கு இழுக்கப்பட்டுவிடுகின்றோம். உண்மையைக் கூறின், அந்நிய ஆதிக்கத் திலைக்கோ, பிற நிலைமைக்கோ ஆட்பட்ட எந்த நாட்டிலும், ஏதாவதோர் பொருளில் அரசியலுக்குள் அகப்படாதிருத்தல் மிகஅரிதல்ல. ஆகலால் நான் அரசியலுக்கு இழுக்கப்பட்டிருக்கின்றேன். ஏனெனில் அரசியலும் பொது ஜன சேவை வாழ்வும், சமுத்திரத்தில் வாழும் எண் காலுடைய அரக்க மீன்களைப்போல்வன. கொடிகள் போன்ற தங்கள் கால்களை அவை உங்கள்மீது வீசி, உங்களைப்பிடித்துத் தொங்குகின்றன. அப்பிடியினின்றும் விடுபடல் ஏறக்குறைய அசாத்தியமாகின்றது...... நான் அரசியலைப் பற்றிப்பேசவேண்டுமென நீங்கள் விரும்பவில்லை; நானும் விரும்பேன். ஆனால், ஒன்றிருபொருளில் நான் உங்கட்குக் கூறலாம். அரசியலென்பது, அகண்ட பொருளிலே, மனித சமூகத்தின் சகல விபக்கங்களையும் தழுவியதாகும். குறுகிய பொருளிலே, அது இனிமையாயிராது. அரசியலென்பது அயோக்கியனின் வியாபாரம் என்று ஓர் ஆங்கில மன்னர்—மூன்றாம் ஜார்ஜென நினைக்கிறேன்—கூறியது உங்களிற் சிலருக்கு ஞாபகமிருக்கும். கல்லது; ஒருகால் அது மிகக் கடுமையான வார்த்தையாகவிருக்கலாம்; ஆனால், மிகக்குறுகிய துறையிலேயுள்ள அரசியல், விரும்பத்தகாத மனிதர்கட்குப் புகலளித்து விடுகின்றது; அரசியல் உறையைப் போர்த்துக்கொண்டு, அநேகம் தீயபொருள்களைக் காண்பதால், அரசியலிலே கலக்க வேண்டிய அநேக மனிதர்கள், கேர்த்தியான உணர்ச்சிகள் உடைய அநேக மனிதர்கள், அரசியலை விட்டு ஓடிப்போகின்றார்கள். நமது இந்த குறைவிக்க உலகிலே, அவற்றிற்கு நாம் தப்பித்துக்கொள்ளவியலாது; அவற்றை நாம் சமாளித்துக்கொள்ள வேண்டும். குறுகிய பொருளைக்கொண்ட அரசியல், ஏறக்குறைய மறைந்தொழிந்து விட்டது. சிறிது காலத்தில் கழிந்தொழியக்கூடிய அரசியலைப்பற்றி ஜனங்கள் பேசுகிறார்கள். இன்று, அரசியல் துறையிலே பொருளாதாரம் வந்து சேர்ந்துளது. பொருளாதாரத்திற்கு, அரசியல் தன்னுடைய பணிப்பெண்ணாகிவிட்டது."

### [illegible]

அதன்மேல், சென்ற வாரம் [illegible] அபூர்வமான தமது தேசியப்போராட்டத்தைப்பற்றிச்சபையோருக்குச்சொல்லுங்கூறினார். அது பொருளாதாரத்தன்மை வாய்ந்த போராட்டம் [illegible] ஜனங்களின் [illegible] போராட்டம் [illegible] அரசியலில் மாத்திரம் [illegible] சமுதாய, பொருளாதார [illegible] குறிப்பதாகவிருந்தது. அதன் காரணம் என்றும் கூறினார். அவர் விளக்கியுரைத்ததாவது:—"பலர் [illegible] மகாத்மா காந்தி இந்திய அரசியலில் கலந்தமுதல், இந்த மாறுதல் வந்துகொண்டேயிருக்கிறது. மகாத்மா வேண்டும் மாறுதலுக்கும் பிறமனிதர் விரும்பும் மாறுதலுக்கும் வேற்றுமையிருக்கலாம். ஆனால், [illegible] எந்த மாறுதலாயினும், சமுதாய, பொருளாதாரப்பிரச்சினைகளைத்தீர்க்கக் கூடியதாக விருத்தல் வேண்டுமென்பதே. சுருக்கிக் கூறுமிடின், அந்த மாறுதல், வறுமையை ஒழிக்கவேண்டும்; மகாஜனங்களுக்குப்பிரதிநிதிகளாகவிருப்பவரிடம் அதிகாரத்தை அளித்துவிடவேண்டும்."

### கிணற்றுத்தவளைத்தேசியமல்ல.

ஆங்கிலேயருக்கும் ஐரோப்பியருக்கும் மன அமைதி தந்தது யாதெனில், பண்டித ஜவஹர்லால் தமது தேசியத்தைத்தெளிவாக விளக்கியுரைத்த விவரணமேயாகும். அதாவது:—"நாங்கள் எங்களைத் தேசியவாதிகள் என்று கூறிக்கொள்ளுகிறோம். ஆனால், தேசியமும், அதன் குறுகிய பொருளிலே இறந்தகாலச்சங்கதியாகிவிட்டது; இன்று அது பெரிதும் அசாத்தியமானதோர் விஷயமாகிவிட்டது. நாம் உலகின் மற்ற நாடுகளின்றும் ஓர் தேசத்தைத் தனித்துப்பிரித்துவிடமுடியாது. இந்தியாவின் சுயேச்சையைப்பற்றி நாங்கள் பேசும்பொழுது, உலகின் மற்ற நாடுகளினின்றும் இந்தியாவைத் தனித்துப் பிரித்துவிடுவது எங்கள் கருத்தல்லவென்பதை எல்லோருமறிவர். இந்தியா சுயேச்சையடைந்தவுடனே, அது உலகத்தின் பிற நாடுகளுடன் எவ்வளவு பலதேசத்தொடர்புகளை வளர்த்துக்கொள்ள வியலுமோ, அவ்வளவு நெருக்கமாக உறவுகொள்ளமுடியுமோ, அவ்வளவையும் வளர்த்துக்கொள்ளும்; பொருளாதாரம், அரசியல், சமூதாயவாழ்வு ஆகிய துறைகளில் உலக ஒற்றுமையை வளர்ப்பதற்கு எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு உதவியையும் புரியும். இவையே சுயேச்சை இந்தியாவின் முதற்காரியமாயிருக்கும்." இவ்வாறு தமது கொள்கையை அவர்வெளியிட்டதிலேயே, பம்பாயில் உள்ள ஐரோப்பிய வாலிபர்கள் அவரை நல்வரவளிக்கத்தக்கதோர் நண்பராய்க்கொண்டனர். அந்த ஐரோப்பிய வாலிபர்கள், இந்தியர் ஆர்வத்தை அனுதாபத்துடன் விளங்கிக்கொள்ள முயன்று வருகின்றனர். சிந்தனையும் செயலுமுடைய இந்தியத்தலைவர்களை, அவர்கள், அடிக்கடி தங்கள் சபைக்கு வந்து பேச அழைக்கின்றார்கள். சென்ற வாரம் பண்டித ஜவஹர்லாலைச் சங்கத்தின் முன் பேசவும், தங்களுடன் சம்பாஷிக்கவும் அவர்கள் அழைத்தார்கள். இது அவர்கள் இந்தியாவை நன்கு விளங்கிக் கொள்ளப் பல வாயில்களைத் திறந்து வைத்திருக்கும்.

## தேசீயக்கோடி.

தேவகோட்டை சுவர்ணமூர்த்தி பெண்பாடசாலையில் சென்ற வியாழக்கிழமை மாலை ஆறுமணிக்குத் தேசியக் கொடியேற்று விழா நடைபெற்றது. அத்தருணம் ஏராளமான ஜனங்கள் வந்திருந்தார்கள். பாடசாலை மாணவிகள் தவிர பல பெண்மணிகளும் கூட்டத்திற்கு வந்திருந்தது குறிப்பிடத்தக்கது. கூட்ட ஆரம்பத்தில் சுவர்ண மூர்த்திப் பெண்பாடசாலை மாணவிகள் கடவுள் வணக்கமும் நாட்டுவணக்கமும் பாடினார்கள். பின்னர் கூட்டத்திற்கு தேசபக்தர் திருகூடசுந்தரம் அவர்களைத் தலைமை வகிக்கும்படி திரு. மாணிக்கவாசகம் செட்டியாரவர்கள் கேட்டுக்கொண்டார். அப்பொழுது திருகூடசுந்தரம் அவர்கள் பேசியதில் "ஒவ்வொரு நாட்டினரின் இலட்சியத்தை குறிக்கும் கொடிகள் ஒவ்வொரு நாட்டிலும் இருந்தன, சேரர் சோழர் பாண்டியர் ஆகியோர்களுக்கும் இத்தகைய கொடிகள் இருந்தே வந்தன. ஆனால் தற்பொழுது நம்மிடையே யூனியன் ஜாக் என்ற ஆங்கிலக் கொடியே அரசாங்கத்தாரால் பரவச் செய்யப்பட்டிருக்கிறது. ஆரம்பபாடசாலையில் படிக்கும் மாணவர்களுக்கும் இந்த யூனியன் ஜாக் கொடியே போதிக்கப்படுகின்றது, அதில் எங்கே 'யூனியன் ஜாக்' பறக்கின்றதோ அந்த இடம் ஆங்கிலேயர்களுக்குச் சொந்தமானதென்று எழுதப்பட்டிருக்கிறது. 'யூனியன் ஜாக்' நமது முனிசிபல் ஆபீசில், இதர காரியாலயங்களில் பறக்கின்றது. இதனின்றும் இந்த இடங்கள் ஆங்கிலேயர்களுக்குச் சொந்தம் என்று ஆகிவிடுமா? நம்மவர்களுக்கு சொந்தமான கொடி இல்லாது போய்விட்டது என்ற குறையை உணர்ந்தே மகாத்மாகாந்தியடிகள் மூன்று வர்ணம் கொண்ட தேசியக்கொடியை ஏற்படுத்தினர். இக்கொடியை நாம் ஒவ்வொரு வீடுகளிலும், ஒவ்வொரு தொழிற்சாலைகளிலும், ஒவ்வொரு காரியாலயங்களிலும் பறக்கவிட வேண்டும். அவ்வாறு பறக்கவிட்டு நமது நாடு நமக்கே சொந்தம் என்பதை நிலைநாட்ட வேண்டும்." என்று கூறினர்.

பின்னர் மறியல் சம்பந்தமாகப் பேசுகையில் "நமது பெரியோர்கள் மும்மலங்களையும் ஒழித்தற்பொருட்டு அதன் அறிகுறியாகத் திருநீற்றை அணியச் சொன்னார்கள். அவ்வாறே இந்தியர்களாகிய நம்பனைவருக்கும் சொந்தமாக மூன்று மலங்களிருக்கின்றன. அவை, அந்நிய ஜவுளி, மதுபானம் உயர்வு தாழ்வைக் கற்பிக்கும் தீண்டாமை ஆகியவையே. இவற்றை அடியோடு ஒழித்தற்கே நாங்கள் முயன்று வருகிறோம். இம்மூன்றில் முதல் இரண்டு—அதாவது அந்நிய ஜவுளிமறியல், கள்ளுக்கடை மறியல் ஆகிய இரண்டையும் தற்பொழுது மேற்கொண்டுள்ளோம். அமராவதிபுதூரில் கள்ளுக்கடை மறியல் வருகிற சனிக்கிழமை ஆரம்பமாகிறது. ஜவுளிக்கடை மறியல் காரைக்குடியில் சென்ற நாற்பத்தைந்து நாட்களாக நடந்துவருவதை அறிவீர்கள். பள்ளத்தூரிலும் இன்னும் சில நாட்களுக்குள் மறியல் ஆரம்பிக்க உத்தேசம். தீண்டாமை விலக்கு சம்பந்தமாக என்ன செய்வது என்பதை ஆலோசித்துக்கொண்டிருக்கிறோம். அது விபரம் முடிவு செய்யப்பட்டதும் அதற்கு வேண்டும் வேலை ஆரம்பிப்போம்" என்று கூறி கடைசியாக, ஊழியன் ஆசிரியர் திரு. ராய. சொக்கலிங்கன் அவர்களை கொடியேற்றும்படியாகக் கேட்டுக்கொண்டார்.



# தேசீயக்கொடி விழா.

## தேவகோட்டையில் வைபவம்.

( நமது நிருபர். )

### திரு. ராய. சோ. அவர்கள்.

திரு. ராய. சொக்கலிங்கன் அவர்கள் தேசியக் கொடியைப் பறக்கவிடும்பொழுது பேசியதன் சாரம் வருமாறு:-

கொடியின் பெருமைபற்றி அன்பர் திருகூடசுந்தரனார் மிக அழகாகப் பேசினார்கள். ஒவ்வொரு அரசருக்கும் பண்டையக் காலத்தில் தனிக் கொடி இருந்ததென்பது உண்மையே. அக்கொடிகளைக் காப்பாற்ற அவர்கள் தங்கள் உயிர்களைத் தியாகஞ் செய்திருக்கிறார்கள். அரசர்களுக்கு மட்டுமல்ல, ஒவ்வொரு வகுப்பாருக்கும் தனித்தனிக் கொடி இருந்ததாகச் சொல்லப்படுகிறது. உதாரணமாக, நாட்டுக்கோட்டைச் செட்டியார்களுக்கு சிங்கக்கொடி இருந்ததாக எழுதப்பட்டிருக்கிறது. இன்னும் ஒவ்வொரு கோவிலுக்கும் தனிக்கொடியிருந்து வருகிறது. சிவன்கோவிலுக்கு ரிஷபக்கொடியும் விஷ்ணு ஆலயத்திற்கு கருடக்கொடியும் இருந்து வருகிறதென்பதை நாம் அறிவோம். ஆங்கிலேயர் வந்தபின்னர் நமக்கு தனிக் கொடியில்லாதுபோயிற்று. எனவே தேசியக் கொடியை காந்தியடிகள் ஏற்படுத்தினர். இக்கொடியைக் காப்பாற்றி நிலைநிறுத்தும் பொருட்டு சில ஆண்டுகட்கு முன்னர் நாகபுரியில் பெரும்போர் நடைபெற்றதும் அதன் பயனாக பல தேசபக்தர்கள் சிறை சென்றதும் நீங்கள் அறிவீர்கள். இந்தக் கொடியை முதன்முதல் இப்பாடசாலையில் பறக்க விடுவதற்காக நான் மகிழ்கின்றேன். இக்கொடி இங்கு மட்டுமல்ல; இவ்வூர் முழுதும் பறத்தல் வேண்டும். நமது சென்னை அரசாங்கத்திற்கேத் தலைநகராக விருக்கும் சென்னை போர்ட் செண்ட் ஜார்ஜில் என்று நமது கொடியை பறக்க விடுகின்றோமோ அன்றே நாம் நமது கொடியைநிலைநாட்டியவர்களாவோம்.'

கொடி ஏற்றப்பட்டதும் மாணவிகள் "தாயின் மணிக்கொடி பாரீர்" என்ற பாட்டினைப் பாடினார்கள்.

### ஊர்வலம்.

பின்னர் சுவர்ண மூர்த்தி பெண் பாடசாலை மாணவிகள், ஆசிரியர்கள், காங்கிரஸ் மெம்பர்கள் அபிமானிகள் ஆகியோர் அடங்கிய ஓர் ஊர்வலம் தேசியக்கொடிகளுடனும் கீதங்களுடனும் ஊரின் முக்கிய வீதிகள் வழியாகச்சென்று திரு சேவு. லெ. ராம. நாராயணன் செட்டியாரவர்கள் வீட்டில்சென்று முடிவெய்தியது. பாதையில் திண்ணன் செட்டியார் ஊருணியின் தென் கரையிலிருக்கும் ஜவுளிக்கடைகள் பக்கம் வந்ததும் தேசபக்தர் திருகூடசுந்தரம் அவர்கள் அன்னியதுணிகளை அகற்றி கதராடை கட்டவேண்டுவதன் அவசியம் பற்றியும், மறியல் விஷயமாகவும் சிறிது பேசினர்.

### திரு. நாராயணன்செட்டியார் வீட்டில் தேசீயக்கோடி.

ஊர்வலம் திரு சேவு. லெ ராம. நாராயணன் செட்டியாரவர்கள் வீட்டுக்கு வந்து முடிவெய்தியதும் அவ்வீட்டின்மீது தேசியக்கொடியைபறக்க விடும்படி அன்பர் திரிகூடசுந்தரம் அவர்களிடம் திரு. நாராயணன் செட்டியாரவர்கள் கேட்டுக்கொண்டார். அப்பொழுது திருகூடசுந்தரம் அவர்கள் கொடியின் பெருமையை எடுத்து விளக்கி, வீட்டின் மீது அதனைப் பறக்கவிட்டார். பின்னர் வந்திருந்தார்கள் அனைவருக்கும் சிற்றுண்டி குளிர்பானம் ஆகியவை அளிக்கப்பட்டன.

---

### அய்மேன்.

மாதக்கூட்டம்:—ஷண்முகானந்த சங்கத்தின் மூன்றுவதாண்டு ஏழாந்திங்கட் கூட்டம் சென்ற வைகாசித் திங்கள் ௩௨-ம் நாள் இரவு அ-மணிக்கு மேல் அ. க. அ. சித.அழ. அருணசலம் தலைமையின் கீழ் நடைபெற்றது. அஞ்ஞான்று கடவுள் வணக்கம் பாடப்பட்டதும் தலைவரவர்கள் முன்னுரையாக சங்கமும் கல்வியும் என்பதுபற்றிப் பேசினார்கள். அப்பால் திருவாளர்களான சி. மாணிக்கவாசகன் சத்தியாக்கிரகத்தின் பொருள் என்பதுபற்றியும் சுப. சேது "நமது கடமை" என்பது பற்றியும் முத்தக்கருப்பன் "நூல்களின் அவசியம்" என்பதுபற்றியும் நீண்ட நேரம் உபந்யாசித்தார்கள், தலைவரவர்கள் முடிவுரையாக "தனவணிகரும் கதருடையும்" என்பதுபற்றியும் "பத்திரிகை படித்தல்" என்பதுபற்றியும் நீண்ட நேரம் அழகாகப் பேசினார்கள். பின்னர் இங்கிதமான சங்கீத வாத்தியங்களோடு இரவு ௧௦-௩௦-மணிக்கு சபை இனிது நிறைவெய்தியதென ஸ்ரீ ஷண்முகதாசனறிவிக்கிறார்.







# முஸ்லீம் — சமரசப் பேச்சு.

முஸ்லீம் தேசிய வாதிகளுக்கும், தனித் தொகுதி வாதிகளுக்கும் டில்லியில் சமரசப் பேச்சுக்கள் நடந்து வந்தன. இது சென்றவாரம் முறிந்து போய்விட்டது. கூட்டுத் தொகுதி பற்றிச் சமரசமான முடிவு எதுவும் ஏற்படவில்லை. முஸ்லீம் தேசிய வாதிகள் சார்பாக டாக்டர் அன்ஸாரியும், டில்லி முஸ்லீம் மகாநாட்டின் சார்பாக மௌல்வி ஷாபி தாவுதியும் தனித்தனி சென்றவாரம் இரு அறிக்கை வெளியிட்டார்கள்.

### ஷாபிக்கட்சி நிபந்தனைகள்.

டில்லி முஸ்லீம் மகாநாட்டினரான ஸர் ஷாபி, மௌலானா ஷவுக்கத்அலி ஆகியவர் கூட்டத்தினர் ஆரம்பத்தில் கூறிய நிபந்தனைகளின் சாரம் வருமாறு:—

(க) பத்து வருடத்திற்குப் பிறகே கூட்டுத் தொகுதிமுறை ஏற்படுத்தலாம்; அப்பொழுது வயது வந்தவர்க்கெல்லாம் ஓட்டுரிமை யிருக்கவேண்டும் ஆனால், எந்தச் சட்ட சபையிலாயினும், அதிலுள்ள பெரும்பான்மை முஸ்லீம்கள் ஆதரித்தால் கூட்டுத்தொகுதியைப் பத்துவருடத்திற்கு முந்தியே எப்பொழுதும் ஏற்படுத்தலாம்; அல்லது (உ) புதிய சட்டசபைகளுக்கு முதல் தேர்தல் தனித்தொகுதி முறையிலே நடக்க வேண்டும்; ஐந்து வருடத்திற்குப் பின்னர், இவ்விஷயத்தைப்பற்றி ஓட்டு எடுத்துக் கூட்டுத் தொகுதியா தனித் தொகுதியா என்பதை முடிவு செய்ய வேண்டும்.

### தேசீய வாதிகள் நிபந்தனை.

டாக்டர் அன்ஸாரி தேசியவாதிகள் சார்பாகக் கூறியதாவது:—

(க) முதல் பத்துவருடங்களுக்கும் கூட்டுத் தொகுதியை ஏற்படுத்தல்; அதன் பின்னர், தனித் தொகுதியா என்பதை ஓட்டு மூலம் முடிவு செய்தல்; அல்லது (உ) முதல் சட்டசபைகளில் பாதி முஸ்லீம்களைக் கூட்டுத் தொகுதி முறையாலும், பாதி முஸ்லீம்களைத் தனித் தொகுதி முறையாலும் தேர்ந்தெடுப்பது; இரண்டாவது சட்டசபைகளில், மூன்றிலிருபங்கினர் கூட்டுத் தொகுதியாலும், ஒரு பங்கினர் தனித் தொகுதியாலும் தேர்ந்தெடுக்கப்படவேண்டும்; அதன் பிறகு வயது வந்தவர்க்கெல்லாம் ஓட்டுரிமை வழங்கிக்கூட்டுத்தொகுதி முறையாலேயே தேர்ந்தெடுத்தல்.

### போபால் மகாநாடும் பின்னரும்.

போபால் மகா நாட்டில் பற்பல திருத்தங்கள் இவற்றிற்கு யோசனையாசனையாக் கூறப்பட்டன. இந்த யோசனைகளைப்பற்றி, பல முஸ்லீம் ஸ்தாபனங்களையும் கலந்தாலோசிப்பதற்காக மகாநாடு கலைக்கப்பட்டது. ஆனால், இருகட்சிக் காரியக் கமிட்டிகளும் மே மாதத்தில் ராஜி முறிந்ததாக முடிவுகள் செய்துவிட்டன. ஆனால், ஜுன்-மீ ௩-௨ மறுபடியும் இருதரப்பும் கூடின. ஆனால், முறைப்பட்ட மகாநாடாகவில்லாமல் சம்பாஷணைகள் மட்டில் நடந்தன. இருகட்சிக் காரியக் கமிட்டிகளின் முன்னரும் பின் வரும் ஏற்பாட்டை யோசனைக்கு வைப்பதென முடிவுசெய்து கொண்டார்கள். அதாவது:—

(க) முதல் ஐந்துவருடத்திற்குத் தனித் தொகுதியிருத்தல்; பின்னர் கூட்டுத் தொகுதியை ஏற்படுத்தல்; ஆனால், இந்து அபேட்சகரும் சரி முஸ்லீம் அபேட்சகரும் சரி, மற்ற வகுப்பினரது ஓரளவு ஓட்டுக்களைப் பெற வேண்டும்; எனினும் நூற்றுக்கு ௬௦ விகிதமுள்ள முஸ்லீம் அங்கத்தினர் சம்மதத்தைப் பெற்று, இந் நிபந்தனையை எடுத்துவிடலாம்; அல்லது (உ) முதல் பத்துவருஷங்களுக்குத் தனித் தொகுதி யிருத்தல்; பிறகு, சட்டசபையின் மூன்றிலிருபங்கு முஸ்லீம் அங்கத்தினர் எதிர்க்காவிட்டால் கூட்டுத் தொகுதியை ஏற்படுத்துதல்,

### கடைசி நிலைமை.

ஆனால், மகாநாட்டுக் கூட்டம் சிம்லாவுக்கு ஒத்திவைக்கப் பட்டிருந்தது! சிம்லாவில் பேச்சுவார்த்தைகள் நடந்து, சென்ற வாரம் முறிவடைந்து விட்டது.

---

# திவான்பகதூருக்குப் பாராட்டு விருந்து.

## சட்டமறுப்புப்பற்றி செட்டிநாட்டு ராஜா.

காரைக்குடி முனிசிபல் தலைவரும் தேவகோட்டை தாலூகா போர்டு தலைவருமாகிய திரு ஆவி.பழ.சிதம்பரம் செட்டியாரவர்கட்கு திவான் பகதூர் பட்டம் சமீபத்தில் அரசாங்கத்தாரால் அளிக்கப்பட்டதைப் பாராட்டும்பொருட்டு காரைக்குடி நாட்டுக்கோட்டைச் செட்டியாரால் சென்ற ஞாயிறன்று மாலை மணி ௬-க்கு இவ்வூர் ஸ்ரீ மீனாட்சிசுந்தரேஸ்வர வித்யாசாலையில் ஓர் உபசாரக்கூட்டமும் விருந்தும் நடைபெற்றன.

அன்று பாடசாலையின் முன்பக்கத்தில் அழகிய கொட்டகை அமைக்கப்பட்டு அது 'யூனியன் ஜாக்' கொடி, மின்சார விளக்குகள் மகா தோரணங்கள் முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. பாதையில் பல இடங்களில் வரவேற்பு வளைவுகள் ஏற்படுத்தப்பட்டிருந்தன.

### ஊர்வலம்.

முதலாவதாக, கூட்டத்திற்குத்தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த செட்டிநாடு ராஜா சர் அண்ணாமலை செட்டியார் முக்கிய விருந்தினராகிய திரு. ஆவி பழ. சிதம்பரம் செட்டியார் ஆகியோர் நாட்டுக்கோட்டை நகரத்தார்களால் ஸ்ரீ மகர்ப்புடையம்மன் கோவிலிலிருந்து அழைத்துச் செல்லப்பட்டார்கள். ஊர்வலத்தின் முன்னே யானை, அலங்காரக்குதிரைகள், கொடிகள்,பாண்ட், நாகஸ்வரம் முதலியவை சென்றன.

### பொதுக்கூட்டம்.

பொதுக்கூட்டம் ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வர வித்தியாசாலையின் முன்னர் அமைக்கப்பட்டிருந்த சிங்காரக்கொட்டகையில் நடைபெற்றது. கூட்டத்திற்கு செட்டி நாட்டின் பல பகுதியிலிருந்தும் ஏராளமான கனவான்கள் வந்திருந்தார்கள். இவர்கள் தவிர தேவகோட்டை வக்கீல்கள், காரைக்குடி வருமான வரி உத்தியோகஸ்தர்கள், காரைக்குடி, பள்ளத்தூர், கானாடு காத்தான், ஆகிய இடங்களிலுள்ள டாக்டர்கள் ஆகியோர் வந்திருந்தார்கள். பெண் மக்களில் காரைக்குடி, கானாடுகாத்தான் லேடி டாக்டர்களும், பெஞ்சு மாஜிஸ்திரேட் ஸ்ரீமதி பீர்வில் அவர்களும் முன்னணியில் காணப்பட்டார்கள். இதர பெண்மணிகள் சிலர் தென்மேற்குக் கோடியில் காணப்பட்டார்கள்.

கூட்டம், ஸ்ரீ மீனாட்சி பெண் பாடசாலை மாணவிகளால் கடவுள் வாழ்த்துப்பாடுதலோடு ஆரம்பமாயிற்று. முதலாவதாக, செட்டிநாடு ராஜா சர் அண்ணாமலைச்செட்டியாரவர்களைத் தலைமை வகிக்கும்படி திருவாளர் மு. ராம. பெரியண்ணன் செட்டியாரவர்கள் பிரரேபித்தார். அத்தருணம் அவர் நிகழ்த்திய பிரசங்கத்தில் திவான் பகதூர் அவர்களையும் ராஜா அவர்களையும் பலவாறு புகழ்ந்துரைத்தார். இதனை திரு. சித. நா. ராம. நாராயணன் செட்டியாரவர்கள் ஆமோதித்தார். எனவே கரகோஷத்தினிடையே ராஜா அவர்கள் தலைவருக்கென போடப்பட்டிருந்த ஆசனத்தில் அமர்ந்தார். அப்பொழுது, தலைவர், முக்கிய விருந்தினர் ஆகிய இருவருக்கும் மாலைகள் அணிவிக்கப்பட்டன. பின்னர் ஸ்ரீமீனாட்சி சுந்தர வித்தியாசாலை மாணவர்களில் சிலர் வாழ்த்துப்பாட்டு பாடினார்கள்.

திரு. சிவ. அண்ணாமலை செட்டியார் அவர்கள் கூட்டத்திற்கு வரமுடியாத பல அன்பர்கள் அனுப்பிய மகிழ்ச்சி உரைகளைப்படித்தார். திருவாளர் முத்து. வெ. வெள்ளையப்ப செட்டியாரவர்கள் நகரத்தார் சார்பாக ஓர் உபசாரப்பத்திரம் வாசித்து அதனை தங்கமும் வெள்ளியும் கலந்த ஓர் அழகிய பேழையில் வைத்து திவான் பகதூர் பட்டம் பெற்ற திரு. சிதம்பரம் செட்டியாரவர்கட்கு அளித்தார்.

பின்னர் திருவாளர்களான பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார், பைந்நாகரம் இராமநாதன் செட்டியார், சிதம்பர ஐயர் ஆகியோர் திவான்பகதூர் அவர்களையும் ராஜா சர் அவர்களையும் பலபடப் புகழ்ந்து அவர்கள் இருவருக்கும் பல்விதமான தொடர்பு இருக்கின்ற தென்பதை அழகுபட தங்களுடைய பாண்டித்தியம் விளங்கத் தக்கவாறு கூறினார்கள்.

### திவான்பகதூரின் பதிலுரை,

முக்கிய விருந்தினராகிய திவான்பகதூர் சிதம்பரம் செட்டியாரவர்கள் பெருத்த கரகோஷத்தினிடையே எழுந்து தம்மைப் பல்வாறு புகழ்ந்து பேசிய அன்பர்களையும், தனக்காக இவ்வளவு பெரும் உபசாரம் நடத்த முன் வந்த நகரத்தார்களையும் பெரிதும் பாராட்டி அவர்களுக்கு கைமாறு அளிப்பதின்னதென்றே தோன்றுதிருப்பதாகக் கூறினர். தனக்குக் கிடைத்த கௌரவம் தனது சமூதாயத்தவர்களான நகரத்தார்களுக்கே கிடைத்ததாக கூறி திரும்பவும் எல்லோருக்கும் வந்தனம் கூறினர்.

### தலைவர் முடிவுரை.

தலைவர் செட்டிநாடு ராஜா அவர்கள் முடிவுரையாகப் பேசியதன் சாரம் வருமாறு:—

நமது விருந்தினராகிய ஆவி. பழ. சிதம்பரம் செட்டியாரவர்கட்கு துரைத்தனத்தார் உயர்ந்ததான 'திவான் பகதூர்' என்ற பட்டமளித்ததற்கு மேன்மை தங்கிய நகரத்தாரவர்களின் சந்தோஷத்தை அறிவிக்கும் உவகைப் பத்திரத்தாலும், கல்வி கேள்விகளில் சிறந்த மகாவித்வான்களான பண்டிதமணி, பைஞ்ஞரம் ராமநாதன் செட்டியார், சிதம்பர ஐயர் ஆகியோர்கள் புகழ்ச்சியுரையாலும் கேட்டுப் பெரும் சந்தோஷமடைந்தோம். திரு. ராமநாதன் செட்டியாரவர்கள் பேசியபொழுது இங்கு கூடியிருக்கும் யாவருள்ளும் தனக்கே அதிக சந்தோஷத்திற்குக் காரணமுண்டு என்றும் அதற்கு முக்கிய விருந்தினரான ஸ்ரீமான் செட்டியார் அவரது குடும்பத்தையும் கோவிலையும் சேர்ந்தவராக விருப்பதே யாம் என்றும் குறிப்பிட்டார். ஆனால் நான் சொல்வது இங்குள்ளார் யாவரிலும் அதிகச் சந்தோஷப்பட வேண்டியவன் நான் தான் என்பதே. இதற்குத் தகுந்த காரணமுண்டு. நண்பர் செட்டியாரவர்கட்கு ராவ் பகதூர் பட்டம் கிடைத்த காலத்தில் நடந்த பாராட்டுக் கூட்டத்திலும் நான் தான் அக்ராசனம் வகித்தேன். உயர்ந்த பட்டமாகிய திவான்பகதூர் கிடைத்த இன்றும் எனக்கே அக்ராசனம் வகிக்கும் பாக்கியம் கிடைத்திருக்கிறது. இதுவே மற்றவர்களை விட நான் அதிக சந்தோஷமடையத் தூண்டியது.

நமது செட்டியார் ராவ்பகதூர் கிடைத்த சிறிது காலத்திற்குள்ளேயே உயர்ந்த திவான்பகதூர் பட்டத்திற்கு உரியவரானார். தேச ஊழியத்தில் ஈடுபட்டுத் தேச சேவை செய்யும் அவர்கட்கு இன்னும் உயர்ந்த பதவிகள் பெறுதற்கு தகுதியுண்டு என்றும் அப்பதவிகள் அவர்களுக்குக் கிடைக்குமென்றும் எனக்கு நம்பிக்கையுண்டு. அத்தகைய புகழ்ச்சிகள் அவர்களுக்குக் கிடைக்கும் அக்காலத்திலும் நானும் கலந்து கொள்ளும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமென்று எண்ணுகிறேன்.

இச்செட்டி நாட்டில் காரைக்குடி 'ஏ. வி. பி. எல்'லை அறியாதார் மிகச் சிலர். செட்டிநாட்டில் ஏற்படும் பொது நன்மைக்கான எந்தக் காரியத்திலும் அவர்கள் முன்னின்று நடத்துவார்கள். ஸ்ரீமான் செட்டியார் வாக்கு வேதாந்தம் பேசுபவரல்ல. எடுத்த காரியத்தை முடிவுறச் செய்யும் வல்லமை அவர்களுக்குண்டு.

ஸ்ரீமான் செட்டியார் பெரும் பிடிவாதக் குணமுடையவர்கென்று பலர் சொல்ல நான் கேள்விப் பட்டிருக்கிறேன். நானும் அவர்களைப்பற்றி அவ்வாறே மதித்திருக்கிறேன். ஆனால் பிடிவாதத்தில் இருவகையுண்டு. நன்மைதரத்தக்கவையாகவும் அல்லது தீமை கொடுப்பவைகளும் அப்பிடிவாதம் இருக்கலாம்; நமது செட்டியாரிடம் நன்மையளிக்கும் பிடிவாதமே குடிகொண்டிருக்கிறது. இப்பிடிவாத குணமுடையவர்களாலேயே நமது தேசத்திற்கு முக்கியமாக நன்மை செய்ய இயலுமென்று நான் எண்ணுகிறேன்.

அவர்கட்கு கல்வி அபிவிருத்தியில் பெரும் அக்கரையுண்டு. செட்டிநாட்டில் உயர்தரபடிப்பு இல்லாக் குறையை மேன்மைதங்கிய காரைக்குடி நகரத்தார்கள் நிவர்த்தித்தார்கள். இதற்கு நமது திவான் பகதூர் அவர்கள் பெரும் முயற்சி எடுத்து வருகின்றார்கள்.

ஸ்ரீமான் செட்டியாருக்கு ஸ்தல ஸ்தாபன ஆட்சியிலும் பெரும் அநுபவமுண்டு. செட்டிநாட்டின் தலைநகராக விருக்கும் காரைக்குடியின் முனிசிபல் தலைவராகவும் தேவகோட்டை தாலூகா போர்டின் பிரசிடெண்டாகவும் இருந்து வருகிறார். ஜில்லா அதிகாரிகள் யாவராலும் நன்கு மதிக்கப்படுகிறார். அவரது திறமையைப் புகழ்ந்து பாராட்டாரில்லை. 'வோட் அப் நோ கான்பிடன்ஸ்' எனும் நம்பிக்கைக் குறைவுத் தீர்மானம் மலிந்த இக்காலத்தில் பலவித அபிப்பிராய பேதங்களுக்கிடையில் ஓர் சபையைச் செம்மையாக நடத்திச் செல்லுதல் மிகவும் கஷ்டம். அன்னதாக, நமது நண்பர் கூடிய மட்டும் சிறப்பாக நிர்வாகத்தை நடத்திச் செல்லுதல் மிகவும் பாராட்டத்தக்கதே.

நமது செட்டியார் மனோசாட்சிக்கு விரோதமாகத் தோன்றும் எக்காரியத்தையும் எதிர்த்துப் பேசும் சக்தி வாய்ந்தவர். சட்டமறுப்பு இயக்கக் காலத்தில் அதனை எதிர்த்து ஸ்ரீமான் செட்டியார் பேசியது உங்களுக்கு ஞாபகமிருக்கும். நமது நாடு சட்டத்திற்கும் அமைதிக்கும் உட்பட்ட நாடென்பதும், நாம் எப்பொழுதுமே சக்ரவர்த்தியிடம் பெரும் பக்தி கொண்டவர்கள் என்பதும் யாவரும் அறிவர். சட்டமறுப்பு இயக்கமானது நாட்டில் ஓர் புதிய கிளர்ச்சியை உண்டு பண்ணுகிறது, எதனையும் எதிர்க்க அது தூண்டுகிறது. அதற்கு ஸ்தரியமும் வருகிறது. இதன் பயன் அமைதியின்மையும் கலகமும். அப்பொழுது வியாபாரம், விவசாயம் யாவும் சீர் கேட்டைகின்றன. இதனால் ஏற்படும் கஷ்ட நஷ்டமும் கொஞ்சமல்ல. நமக்கு அரசியல் சம்பந்தமாக வட்டமேஜை மகாநாட்டால் பலன் கிடைக்கலாம். ஆனால், சத்தியாக்கிரகம் என்பது பகுத்தறிவில்லாதார் கையில் சிக்கி விட்டால் எடுத்ததற்கெல்லாம் சத்யாக்ரகமாகவே முடியும்.

நமது திவான்பகதூர் சட்டமறுப்பை எதிர்த்ததன் பயனாக அது அதிகம் பரவவில்லை. இவ்வாறு பல வழிகளிலும் ஊழியம் செய்து வரும் நமது செட்டியாரைப் பாராட்டி துரைத்தனத்தார் உயர்ந்த திவான்பகதூர் எனும் பட்டத்தை அளித்தார்."

பின்னர் திரு. செட்டியார் அவர்கள் ஆரோக்ய திடகாத்திரமுடன் இருக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார்.

கடைசியாக திரு. கா. கு. ராமநாதன் செட்டியாரவர்களால் எல்லோருக்கும் நன்றிகூறப்பட்டது.

ராஜவாழ்த்துடனும் ஜயகோஷத்துடனும் கூட்டம் முடிவெய்தியது. பின்னர் வந்திருந்தவர்களுக்கு விருந்து நடைபெற்றது. இரவு பாட்டுக்கச்சேரி, வாணவேடிக்கை முதலியவை நடைபெற்றன. (ந. தி.)

---

### சொக்கலிங்கம்புதூர்.

காங்கிரஸ்சபை ஸ்தாபனம்:—சொக்கலிங்கம் புதூர் காங்கிரஸ் மகாசபை ௩௰-௳ சனிக்கிழமை மாலை ௬-மணிக்கு நடைபெற்றது. அத்தருணம் திருவாளர் சுப. சா. முருகப்ப செட்டியாரவர்கள் தலைவராகவும் திருவாளர் சு. வீர. சு. வீரப்ப செட்டியாரவர்கள் காரியதரிசியாகவும் திருவாளர்களான அக. ராம. அருணசலன் செட்டியார் பழ. ப. நாராயணன் செட்டியார் சு. வலி. சாத்தப்ப செட்டியார் டி. பி. ஜெகதீசய்யர் ஆகியோர்கள் நிர்வாகசபை அங்கத்தினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.




மன்னவர் தமக்கும் அஞ்சேன்
மாண்பெரும் நாட்டிற் காக
என்னுயிர் தனையும் ஈவேன்
எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்
என்னரும் பாரதத்தாய்
பண்டைவாழ் வெய்தப் பாரில்
ஒன்னலர்க் கஞ்சா நல்ல
ஊழியம் தலைமேற் கொண்டேன்.

ஊழியன் காரைக்குடி
பிரசோற்பத்தி-ஞு ஆனி-மீ ௧௬-உ

## வைசிராய் ஆசை.

புதிய வைசிராய் வில்லிங்டன் பிரபு, முதன் முதலாக வாய் திறந்து, இந்திய அரசியலைப் பற்றிப் பேசியுள்ளார். சிம்லா செம்ஸ் போர்டு கிளப் அதற்குரியதோர் சந்தர்ப்பத்தை நல்கியுள்ளது. அவரது உரையிற் பெரும்பாலான பகுதிகளும் நாட்டிலே ஆதரவுடன் ஏற்கப்படும் என்பதில் ஐயமில்லை. வில்லிங்டன் பிரபு, தமக்கு முன்னர்த் தம் ஆதனத்திருந்த இர்வின் பிரபுவின் அடிச்சுவட்டைப்பற்றி நடக்க முன்வந்துளார் என்பதை அவர் பிரசங்கம் நன்கு விளக்குகின்றது. இர்வின்-காந்தி ஒப்பந்தத்தைப் பூர்த்தி செய்து, சாசுவத சமாதானத்தை இந்திய அரசியல் வானத்திலே நிலவச்செய்ய வேண்டுமென்ற அவரது ஆசை பாராட்டத்தக்கதேயாகும்.

அவர், அரசியலைப்பற்றிப் பிரஸ்தாபிக்கத் துவங்கியபொழுதும், அதனை முடித்தபொழுதும், ஒரு விஷயத்தை ஒருமுறைக்கிருமுறை வற்புறுத்தியிருக்கிறார். கானடா ஓர் சுதந்திர நாடு; எனினும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக் குட்பட்டதோர் குடியேற்ற நாடாகவே இருந்துவருகிறது. அதில் கவர்னர்-ஜெனரல் வேலை பார்த்துவிட்டு, அடுத்த பதவியாக இந்திய வைசிராய் ஆசனத்திற்கு வந்திருப்பவர் வில்லிங்டன் பிரபு. அங்குத் தாம் வாழ்ந்த நான்கு சந்தோஷகரமான ஆண்டுகளையே, சீக்கிரத்திலே சீர்திருத்தங்களைப் பெற்ற இந்தியாவில் தமது வாழ்க்கை பெரிதும் ஒத்திருக்க வேண்டுமென்பது அவர் விருப்பம். இந்திய நிர்வாகப் பொறுப்பிலே தமக்குப் பெரும்பளுக் குறைந்து, தாம் ஓர் சட்டவரம்புக்குட்பட்ட—அதாவது சட்டசபைக்குப் பெரிதும் கட்டுப்பட்ட—கவர்னர் ஜெனரலாகிவிட வேண்டுமென்பது அவர் ஆசை. இதைத் தமது பிரசங்கத்தினிறுதியிலும் ஒரு முறை வற்புறுத்தியிருக்கிறார். "பெரிதும்," "ஏறக்குறைய" என்பன போன்ற அடைமொழிகள் கொஞ்சம் ஜாக்கிரதையாகவே உபயோகிக்கப் பட்டிருக்கின்றன வெனினும், இந்தியாவின் சுதந்திர ஆர்வ வெள்ளத்தை எதிர்க்க நினையாமல், அவர் அனுசரித்துச் செல்லுமளவில் அவரை நாம் பாராட்டத் தவறலாகாது.

காந்தி-இர்வின் ஒப்பந்தத்தை நிறைவேற்றுவதைப் பற்றிப் பேசுகையில், தாம் மிக உண்மையாக அதற்கு முயல்வதாக அவர் உறுதி கூறுகிறார். அதோடு, காந்தியடிகளின் உண்மையோடு கூடிய அவ்விருப்பத்திலும் பூரண நம்பிக்கை வைத்திருக்கிறார். காந்தியடிகள் சம்பந்தப்பட்டமட்டில், அவர் ஒப்பந்த நிபந்தனைகளை நிறைவேற்றுவதற்காக எவ்வளவு கடின முயற்சிகளை எடுத்துக்கொள்கின்றார் என்பதை உலகறியும். ஆனால், சர்க்கார்த்தரப்பில், மாகாண அரசாங்கங்களும் அதிகாரவருக்கமும் இன்னும் பிடிவாதங்காட்டி வருவதான அறிகுறிகள் அடிக்கடி வெளிவருகின்றன. இது மிகமிக வருந்தத்தக்கது. வெல்லிங்டன் பிரபு, சிறிது அதிக முயற்சியெடுத்துக்கொண்டு இதனைத் திருத்த முயல்வார் என்று நம்புகின்றோம்.

ஆனால், வெல்லிங்டன் பிரபுவுக்கு ஒரு விஷயம் அதிருப்தியை உண்டாக்கியுளது. சில தலைவர்கள், காந்தி-இர்வின் உடன்படிக்கை தற்காலிக ராஜியேயென்றும் அடுத்த போராட்டத்துக்குத் தயாராகவேண்டுமென்றும் அபிப்பிராயம் தெரிவிப்பதாகவும், இது அவ்வொப்பந்தத்தை நிறைவேற்ற நேர்மையான நெறியாகாதென்றும் வைசிராய் செப்புகின்றார். முக்கியமான அரசியல் பிரச்சினை இன்னும் தீரவில்லை யென்பதை வில்லிங்டன் பிரபுவும் மறுக்கவில்லை. எனவே, இவ்வொப்பந்தம் தற்காலிக ராஜியேயென்பதில் என்ன தடையிருக்கின்றது? அங்ஙனமாக, தேவையாயின், அடுத்த போராட்டத்துக்கும் தயாராக நாடு வலிமையை வளர்த்துக்கொள்ள வேண்டுமெனில் அது எவ்வாறு ஒப்பந்தத்துக்கு விரோதமாகுமென்பது நமக்கு விளங்கவில்லை. எப்படியாயினும் சரியே; முற்போக்கான சீர்திருத்தம் வரினும் சரி, வாராவிடினும் சரியே; நாடு தற்பொழுதைய பலவீனத்தை உதறியெழுந்து உரம் பெற வேண்டுமென்பதில் என்ன ஆட்சேபமிருக்கவியலும்?

தாம் வேண்டுவது சாசுவத சமாதானத்தையே (Peace), தற்காலிக ராஜியை (Truce) அல்ல என்று வெல்லிங்டன் கூறுகிறார். காந்தி-இர்வின் ராஜியே சாசுவத சமாதானமாகி விடுமென்று வெல்லிங்டன் பிரபுவும் கூறத் துணியவில்லை. இந்தியா விரும்புவதும் சாசுவத சமாதானத்தைத்தான்; அது போராடியதெல்லாங்கூட—இனியும் தேவையாயின் போராடத் தயாராயுள்ள, போராடியே தீரவேண்டியதாயுள்ள—இலட்சியம் சாசுவத சமாதானமேயாகும். ஆனால், சமாதானமென்ற பெயரால், அடிமைக் கூண்டில் அடைபட்டிருக்க இந்தியாவால் முடியாதென்பதை வெல்லிங்டன் பிரபு உணர்ந்திருப்பாராயின், — அவ்வாறே உணர்ந்திருப்பாரென நம்புகிறோம்.— அவருடைய ஆசையும், இந்தியாவின் வேட்கையும் பூர்த்தியாகுமென்பதில் சந்தேகமில்லை.

பிரிட்டனுடன் இந்தியா ஒட்டிக்கொண்டே யிருப்பதைப் பாதுகாக்க முடியுமா எனும் விஷயத்தைப் பற்றி எழுந்துள அவநம்பிக்கையையும் ஐயங்களையும் பற்றிப் பிரஸ்தாபிக்கையில், ஏதேதோ, தெளிவில்லாமலும் அசட்டுத் தைரியத்துடனும் செப்பியிருக்கின்றார் வெல்லிங்டன் பிரபு. இருநாட்டில் எதற்கும் விருப்பமாயின் பிரியும் உரிமையில்லாவிட்டால், சமபங்காளித்துவத் தத்துவத்திற்குப்பொருள் இல்லையென்பதை அவர் உணரவேண்டும். சுதேச மன்னர்களிலும், மகாஜனங்களிலும் பெரும்பாலோருக்குப் பிரிட்டனை விட்டுப் பிரியும் ஆசையில்லையென்று திருப்திப் படுகிறார் வெல்லிங்டன் பிரபு. உண்மையாயிருக்கலாம். அடிமைச் சின்னமாக, நிர்ப்பந்தப் பிணைப்பு இருக்குமானால், அம்மன்னர்களதும் மகாஜனங்களதும் சுதந்திர ஆர்வம் பொய்யாய்ப்பழங் கனவாய்ப் போகச் செய்யப்படுமானால், அவ்வாசை பாவி மிகமிக வலுத்துவிடும் என்பதையும் வெல்லிங்டன்பிரபு உணர்தல் வேண்டும். பாதுகாப்புக்கள் என்ற பக்தங்களைப்பற்றி வில்லிங்டன்பிரபு புத்திசாலித் தனமாக மௌனஞ் சாதித்துவிட்டார். பாதுகாப்புக்கள் கைந்து நலிந்து படக் காணும் முதற்குறியோ இது? ஆயின், எல்லாம் இனிதே முடிடும் என்பதில் ஐயமில்லை.

---

## இடிமுழக்கம்.

---

### முஸ்லீம் ஒற்றுமையில்லை.

தேசிய முஸ்லீம்களுக்கும், மௌலானா ஷவுக்கத்தலி, ஸர் ஷாபி ஆகியவர் கோஷ்டிக்கும் சிம்லாவில் நடந்து வந்த சமாசப்பேச்சுச் சென்ற வாரம் முறிவடைந்தது பெரிதும் வருந்தற்குரியதாகும். தனித்தொகுதி மிகத்தீங்கானதாகும். அதைவைத்துக் கொள்வதாயினும், வைத்தழவேண்டியிருக்கின்றதேயென்றவெறுப்புடனே தற்காலிகமாகவேதான் வைத்துக் கொள்ளவேண்டும். ஆனால், அது சாசுவதமாகாது. சீக்கிரத்திலே தொலையும் வழியையும் இப்பொழுதே கோலி வைக்கவேண்டும். தனித்தொகுதிவாதிகள் ஒத்து வாராததால், தேசிய முஸ்லீம்கள் இனி "நியூ இந்தியா" கூறுவதேபோல், சீகியர் முதலிய பிற சிறுபான்மை வகுப்பார்களுடன் சமரச ஏற்பாடுகளைச் செய்துகொள்ளுதல் மிக நலம் பயக்குமெனவே நாமும் கருதுகிறோம். ஒரு தாயின் குழந்தைகள் போன்ற, இந்தியத் தாயின் பல சமூகங்களுக்குள் ஒரு பெரிய சமூகத்தால், நமது உட்பிளவு, வெளிநாட்டுக்குச் சென்று பிறர் மத்தியஸ்தத்தைத் தேடவேண்டிய நிலைமை ஏற்பட்டதற்கு, ஒவ்வொரு உண்மை இந்தியத் தேசாபிமானியும் மனம் வருந்தாமலிரார்.

### திவான்பகதூர் விழாச்செலவு.

"திவான்பகதூர்" ப் பட்டம் என்பது தொளாயிரத்தோடு தொளாயிரத்தொன்று; நாட்டிலே அது அவ்வளவு ஏராளம். அரசாங்கத்தாரிடம் மிக மலிவாக, செலவில்லாத, கையிருப்புச் சரக்கு இத்தகைய பட்டங்கள். இவற்றுள் ஒன்றைப் பெற்றதற்காக, நேற்று முன்தினம் காரைக்குடி நகரத்தார் போரால், திவான்பகதூர் ஆவி. பழ. சிதம்பரம் செட்டியாருக்கு அளிக்கப்பட்ட விருந்தில், பெருத்த ஆர்ப்பாட்டம்; செலவோ மிக அதிகமென்பது தெளிவு. இந்தப்பொருள் நெருக்கடியான காலத்தில், எளிய தொழிலாளர் சம்பளத்தைக் குறைப்பது முதல் பல சிக்கனங்கள் செய்யத் தனவணிகர் தீர்மானம் செய்யும் இந்தச் சமயத்தில், நகரத்தார் பெயரால், நிழலொத்ததோர் வெறும் மாயப்பட்டத்தை ஒருவர் பெற்றதற்காக, விருந்தொன்று நடத்தி, இவ்வளவு பெருஞ் செலவு செய்ததை என்னென்று கூறுவது? அநாவசியச் செலவு, அசட்டுச்செலவு; அவ்வளவுதான். வேறென்ன கூற விருக்கின்றது?

### "செட்டிநாட்டு" ராஜா கூற்று.

உள்ளூரில் சென்ற ஞாயிறன்று திவான்பகதூர் ஆவி. பழ. சிதம்பரம் செட்டியாரவர்களுக்கு நடந்த விருந்துக் கூட்டத்தில் தலைமை வகித்துப் பேசிய ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியாரவர்களது சில கூற்றை நாம் பலமாகக் கண்டிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். அவர் அநாவசியமாகச் சத்தியாக்கிர இயக்கத்தைத் தாக்கிப் பேசியிருக்கிறார். இது பெரிதும் வெறுக்கத்தக்கவொன்று. சத்தியாக்கிரகத்தால் கலகமும், அமைதியின்மையும் ஏற்பட்டு, வியாபாரம், விவசாயம் முதலியன சீர்கேடடைந்ததாக அவர் கூறுகின்றார். இது முற்றிலும் தவறாகும். உலக முழுவதுமே தான் இப்பொழுது அல்லற்படுகிறது. சத்தியாக்கிரகம் உலகமுழுவதுமா நடக்கிறது? மேலும், "சத்தியாக்கிரகம் பகுத்தறிவில்லாதவர் கையில் சிக்கிவிட்டால், எடுத்ததற்கெல்லாம் சத்தியாக்கிரகமாகவேமுடியும்" என்று அவர் கூறுகிறார். அக்கிரமமான எதையொழிக்கவும்சத்தியாக்கிரகம்நன்றாகச் செய்யலாம். ஏன் கூடாது? அன்றியும் பகுத்தறிவில்லாதவர் கையில், எது சிக்கினால்தான் ஆபத்தல்ல? பணமோ, தொழிலோ, பதவியோ, அதிகாரமோ, செல்வாக்கோ எது சிக்கினும் தீமைதான்? இதனால், குற்றம் அவற்றின் பாற்படுமோ? சத்தியாக்கிரகம் களங்கமற்றது, உயர்ந்தது; தவறாக உபயோகித்தால், உபயோகிப்பவர்க்கே இன்னல் பயப்பது. இவற்றை ஏனோ ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் மறந்தார்? இன்னோர் விசித்திரம். இந்நாட்டிலே, ராவ்பகதூர் சிதம்பரம் செட்டியார்(இப்பொழுது திவான்பகதூர்)சத்தியாக்கிரகத்தை எதிர்த்துஅடக்கிவிட்டதாக நமது ராஜா அவர்கள் கூறுகின்றார். இது வோர் விந்தையேயாகும். நமது "ராவ்பகதூர்" அவர்கள் ஓரேஒரு ராஜபக்தர் திருக்கூட்டத்தை நடத்தினர். அவ்வளவுதான். சத்தியாக்கிரகத்துக்கு அவர் வேறெக் குற்றமும் இழைத்ததாக நாமறியோம். அவரால் சத்தியாக்கிரகம் எவ்விதமும் பாதகமடையவில்லை. அவர் முயன்றிருந்தாலும் அதை அவர் ஒரு சிறிதும் அசைத்திருக்கவும் முடியாது. தற்பொழுதைய அரசியல் நிலைமையில், ராவ்பகதூர் முதலிய பட்டதாரிகளுக்கும் பொதுஜனங்களுக்கும் வெகுதூரம் என்பதை ராஜா அவர்கள் புரிந்து கொள்ளாததை விரோதமென்றுதான் கூறவேண்டும். பொதுவாக, நமது திவான்பகதூர் சிதம்பரம் செட்டியார் அவர்கள் மீது, சத்தியாக்கிரக எதிர்ப்பு என்ற அபாரமான சுமையை, அநாவசியமாக இச்சமயத்தில் நமது ராஜா அவர்கள் ஏற்றி, அவர்களைத் தொல்லை செய்திருக்கலாகாது என்பதே நமது பணிந்த கருத்து.

---



## சுதேசிய நிலையம்.

காரைக்குடி சுதேசி அபிவிருத்தி நிலையத்தின் சார்பில் சென்ற புதன்கிழமை மாலை ஆறு மணிக்கு இவ்வூர் மகர் நோன்புப்பொட்டலில்லர் பொதுக்கூட்டம் ஊழியர் ஆசிரியரும் காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் தலைவருமான திருவாளர் ராய. சொக்கலிங்கன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அத்தருணம் ஏராளமான ஜனங்கள் கூடியிருந்தார்கள்.

தேசிய கீதங்கள் பாடுதலோடு கூட்டம் ஆரம்பமானதும் நிலையக் காரியதரிசி திரு கோபாலையங்கார் அவர்கள் திரு ராய. சொ. அவர்களைத் தலைமை வகிக்கும்படி கேட்டுக் கொண்டார். பின்னர் தலைவர் முகவுரையாகப் பேசுகையில் காரைக்குடியில் நடைபெறும் மறியலைப்பற்றி தாம் அயல் நாட்டிலிருக்கும்பொழுது பத்திரிகைகளில் படித்து வந்ததாகவும் அப்பொழுது தொண்டர்கள் புடவைக் கடை செட்டியார்களால் அடிக்கவும் மிதிக்கவும் ஏசவும் பட்டார்கள் என்பதைக் கேட்க வருந்தியதாகவும் கூறி "நான் இத்தகைய அடிகள் பெறும் பொருட்டே வந்திருக்கிறேன். நாட்டின் நன்மை கருதி நடைபெறும் இம்மறியலில் செட்டியார்கள் யாவரும் தவறாது சேர வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்" என்றுரைத்தார்.

பின்னர் சுதேசிய அபிவிருத்தி பற்றி தேசபக்தர் பொ. திருகூட சுந்தரம் அவர்கள் நீண்ட நேரம் பேசினார். கடைசியில் காரைக்குடியில் நடைபெறும் மறியலுக்கு சுதேசிய அபிவிருத்தி நிலையத்தாரைப் போன்று எல்லோரும் செய்ய வேண்டும்" என்றும் கேட்டுக் கொண்டார்.

பின்னர் சிராவயல் குருகுல அமைச்சர் திரு கு. கும்பலிங்கம் அவர்கள் சிறிது பேசியதும் தலைவர் முடிவுரை கூறினார். காரியதரிசியால் எல்லோருக்கும் நன்றி கூறுதலோடு கூட்டம் இரவு மணி ௯-௧௫ இனிது நிறைவெய்தியது. (௩-நி)

---

## அமராவதிபுதூர்.

காங்கிரஸ் நிர்வாகசபைக் கூட்டம்:—ஜுன் ௨௬-உ இரவு ௭-௩௦-மணிக்கு ஸ்ரீமான் எஸ் பி. நாச்சியப்பன் தலைமையில் நிர்வாக சபைக் கூட்டம் நடைபெற்றது. மறியல் சம்பந்தமான விஷயங்களைப்பற்றி யோசிக்கப்பட்டது. ஸ்ரீமான் டி. நாராயணய்யர் அவர்கள் தொண்டர்படைத் தலைவராகவும், ஸ்ரீமான் எஸ். பி. நாச்சியப்பன் அவர்கள் உப தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். கீழ்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேறியது க. இப்பொழுது இவ்வூரில் கள்ளுக்கடை மறியலுக்கு தொண்டர்களாக சேர்ந்துள்ளவர்களுக்கு ஆடை அளிப்பதற்காக பண உதவி செய்யும்படி ஜில்லாகாங்கிரஸ்கமிட்டியாரை இக்கூட்டம் கேட்டுக்கொள்ளுகிறது. ௨. இக் கமிட்டியின் செலவிற்கு வேண்டிய பணத்தை பொது ஜனங்களிடமிருந்து வசூலித்துக்கொள்ள இவ்வூர் காங்கிரஸ்சபை காரியதரிசி ஸ்ரீமான் ஆர். இராமநாதன் அவர்களுக்கு அதிகாரமளிக்கிறது. ௩. மறியல் சம்பந்தமான நிகழ்ச்சிகளை தினந்தோறும் பத்திரிகைகளுப்ப ஸ்ரீமான் ஆர். இராமநாதனை நியமிக்கிறது. ௪. மறியல் சம்பந்தமாக காரியதரிசியால் கொண்டுவரப்பட்ட விதிகளை ஒப்புக்கொள்ளப்பட்டது என்று அறிவிக்கப்படுகிறது.

---

# காரைக்குடி ஜவுளி மறியல்.

## தொண்டர்களுக்கு மீண்டும் அடி!

### மெ. லெ. வெ. கடையில் தீ!

காரைக்குடி அன்னிய ஜவுளிக்கடை மறியல் மிக மும்முரமாக நடைபெற்று வருகிறது. ஏற்கனவே மறியல் செய்த தொண்டர்களோடு மறியல் சபைத் தலைவர் திரு. பொ. திருகூடசுந்தரம் அவர்கள் ஒவ்வொரு நாளும் காலை மாலை இருவேலைகளிலும் இரண்டு மணி நேரம் மறியல் செய்து வருகிறார்.

காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் தலைவரும் ஊழியன் ஆசிரியருமான திரு. ராய. சொக்கலிங்கன், மறியல் சபை காரியதரிசி திரு. லட்சுமண ஐயர், அங்கத்தவர்களான திரு. சித. ராமனுதன் செட்டியார், திரு. ராம. திருநாவுக்கரசு செட்டியார் ஆகியோரும் திரு. நாராயணன் செட்டியார் திரு. சா. நா. சா. அருணாசலன் செட்டியார் திரு. சுப. மெய்யப்ப செட்டியார் திரு. முரு. அண்ணாமலை செட்டியார் ஆகியோரும் ஒவ்வொரு தினமும் மாலை மறியலில் கலந்து வருகிறார்கள். இன்னும் ஏராளமான தனவணிக நண்பர்கள் தொண்டர்களாகச் சேர்வதாகவும், கூறியுள்ளார்கள். இவ்வார மறியலில் தேவகோட்டை திரு. ராம. அருணாசலன் திரு ராம காசிநாதன், திரு முருகன், சுவர்ணமூர்த்தி பெண்பாடசாலை மாணவிகள் ஆகியோர் கலந்து கொண்டார்கள்?

நேற்று இரவு சுமார் ௮-மணிக்கு இவ்வூர் நகரச் சிவன்கோவில் சுவாமி கொப்புடையம்மன் கோவிலுக்கு சமீபத்தில் மெ. மெ. வீதியில் வந்துகொண்டிருந்தது. அத்தருணம் கொப்புடையம்மன் கோவிலினுள்ளிருந்து அம்மன் சேடகமும் வெளியே கொண்டுவரப்பட்டது. சுவாமி தரிசனத்திற்காக ஏராளமான மக்கள் கோவிலின் முன்னரும், மரு. சு. ட்டயமன் பில்டிங் மேல் மாடியிலும் நின்றுகொண்டிருந்தார்கள். திடீரென திரு. மெ. லெ. வெ. வெங்கடாசலம் செட்டியார் கடையின் முன்னர் போட்டிருந்த கவர்னர் தட்டியின் மேற்கும் பக்கத்தில் சிறிது தீ. இதனைக் கண்ட ஜனங்கள் யாவரும் சென்று தீயைப் பரவவொட்டாது அணைத்து விட்டார்கள். அத்தருணமும் வழக்கம்போல் தொண்டர்கள் மறியல் செய்துகொண்டிருந்தார்கள். கடைச் செட்டியார் உடனே கீழே இறங்கி வந்து மறியல்செய்து கொண்டிருந்த தொண்டர்களான திரு. ஆ. ராமசாமி, திரு. எஸ். நாராயண பிள்ளை ஆகிய இருவரையும் ஓங்கி அடித்து, "அடே பயல் களே! நீங்கள் தான் தீயை வைத்துவிட்டு நிற்கிறீர்கள்" என்றும் அவர் இயல்பாக உபயோகிக்கும் பல ஆபாசவார்த்தைகளையும் கூறினார். தொண்டர்களும் வழக்கப்படி 'வந்தேமாதரம்' என்று கோஷித்துவிட்டு அமைதியாக நின்றார்கள்.

அத்தருணம் திரளான கூட்டம் கூடிவிட்டது. அவர்களைத் தொண்டர்கள் விலக்கிக் கொண்டிருந்தார்கள். மறுபடியும் கடைச் செட்டியார் வந்து கூட்டத்தைக் கலைத்துக் கொண்டிருந்த ஓர் தொண்டரை அடித்தார். ஜவுளிக்கடை செட்டியார்களும் கடை ஆட்களும் பின்னும் சிறிது நேரம் தொண்டர்களை ஏசிக்கொண்டேயிருந்தார்கள். எனினும் தொண்டர் ஆத்திரமடையாது சாத்வீகமாகவே மறியல் செய்து வந்தார்கள். தற்பொழுது மெ. லெ. வெ, மெ. லெ. செ. ஆகிய இரு கடைகள் முன்னும் போடப்பட்டிருந்த கவர்னர்த்தட்டிகள்முற்றும் பிரிக்கப்பட்டு விட்டன. —(௩-நி.)

---

## பொதுக்கூட்டம்.

---

சென்ற வெள்ளிகிழமை மாலை மணி ௬-௩௦ க்கு மகார் நோம்புப் பொட்டல் எனும் காந்திச்சதுக்கத்தில் ஓர் பெரும் கூட்டம் நடைபெற்றது. அத்தருணம் 2000 க்கு மேற்பட்ட ஜனங்கள் கூடியிருந்தார்கள். ஏராளமான பெண்மக்களும் வந்திருந்தார்கள். கூட்டத்தில் அமைதி நிலவியது குறிப்பிடத்தக்கது. தொண்டர்களும் தலைவர்களும் ஊர் வலமாக ஊழியன் ஆபிசின் பக்கத்திலிருந்து புறப்பட்டுத் தேசியகீதங்கள் பாடிக்கொண்டு காந்தி சதுக்கத்திற்கு வந்துசேர்ந்தார்கள்.

முதலாவதாக, தொண்டர் படைத் தலைவர் திரு. தி. ம. நடராஜன் கூட்டம் கூட்டப்பட்டதன் காரணத்தைக் கூறி மறியல் சபை அங்கத்தவர்களுள் ஒருவரான திருவாடர் ராம. திருநாவுக்கரசு செட்டியாரவர்களைத் தலைமை வகிக்கும்படி கேட்டுக்கொண்டார். தலைவர் முகவுரையாகப்பேசியதும் திருவளர் செல்வன் ராமையா என்னும் எட்டு வயது இளந்தொண்டர் "அந்நிய துணி பகிஷ்காரம்" பற்றி சிறிது பேசினார். பின்னர், காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் தலைவரான திரு. ராய. சொக்கலிங்கன் அவர்கள் "காரைக்குடியில் நடைபெறும் மறியலைக்கண்டித்து வெளிப்போந்துள்ள துண்டுப்பிரசுரத்தில் கண்ட விஷயங்கள் யாவற்றிற்கும் ஆணித்தரமான பதில் கூறினார். (இதன் விபரம் முதற் பக்கத்தில் காண்க)

மூன்றாவதாக, தேசபக்தர் பொ. திருகூடசுந்தரம் அவர்கள் எம். ஏ. பி. எல். பேசியபொழுது "பெற்றோர்களால் தங்களுக்கு இடப்பட்டிருக்கும் பெயரை மறைத்து அனுமதேய பெயர்வழிகளாகத்தோன்றுவோர்களுக்கு பொது ஜனங்கள் ஓர் பெயர் வைப்பார். அப்பெயர் 'அயோக்கியன்' என்பது. இது ஆங்கிலத்தில் கையாளப்பட்டுவரும் ஓர் பழமொழி! ஆதலால் பொறுப்புவாய்ந்த எவரும் மொட்டைத்துண்டுப்பிரசுரத்தைக் கண்டு அஞ்சப்போவதில்லை.

எனவே, நான் இத்துண்டு பிரசுரத்திற்கு எதுவும் பதில்கூற விரும்பவில்லை. இங்கு, மறியலுக்கு விரோதமாகவிருப்பன இரண்டு. ஒன்று சண்டமாருதம் பத்திரிகை, மற்றொன்று குமரனில் வெளியாகும் கட்டெறும்பு. இந்த சண்டமாருதம் என்னை அசைத்துவிடப்பார்க்கின்றது, ஆனால் இந்த சண்டமாருதமல்ல கொடும் புயல்காற்று தோன்றினும் என்னை அசைத்துவிட முடியாது. என் வேர் காங்கிரஸ்வேர், காந்தியடிகளின்வேர். காங்கிரசின்மீதுஉண்மைப் பற்றோடு, காந்தியடிகள் கட்டளைக்கு உட்பட்டிருப்பதால் என்னை இந்த சண்டமாருதங்களால் அசைத்துவிட முடியாது. ஆனால் என்று நான் காங்கிரசுக்கு—காந்தியடிகளுக்கு—துரோகம் செய்கின்றேனோ அன்று நானாக வேசாய்ந்து விடுவேன்" என்று கூறினார். பின்னர் தொண்டர்கள் மறியல் செய்துவரும் முறைகளை விளக்கிக் கடைசியாக காரைக்குடியில் அந்நிய ஜவுளி தேவையா? தேவையில்லையா என்று கூறுபவர்கள் கையைத்தூக்கலாம் "என்று கேட்டார். எவரும் கையைத்தூக்கவில்லை. இரண்டாவதாக காரைக்குடியில் நடைபெறும் மறியல் பலாத்காரமான முறையில் அநீதியாக நடைபெறுகின்றது என்று எண்ணுவோர் கையைத் தூக்கலாம். அவ்வாறு உண்மையில் எண்ணுவோர் கையைத்தூக்குவதற்காக கூச்சப்படவேண்டாம்" என்று கூறினார். அதற்கும் எவரும் கையைத் தூக்கவில்லை. கடைசியாக, இந்த மறியல் திருகூடசுந்தரனுக்குச் சொந்தம் பாக்கிப்பேருக்கு இதில் சம்பந்தமில்லை என்று எண்ணுவோரும் கையைத் தூக்கலாம்" என்றார். அப்பொழுதும் எவரும் கையைத்தூக்கவில்லை. சுயமரியாதை கட்சியைச்சார்ந்தவர், மறியல் தவறாக நடைபெறுகிறதென்று எழுதிவந்தவர்கள் எல்லோரும் வந்திருந்தார்கள் அவர்களில் எவரும் கையைத் தூக்கவில்லை. தலைவர் முடிவுரையுடன் கூட்டம் மிக அமைதியாக முடிவுற்றது.

---

## மதுபான மறியல்.

### அமராவதி புதூரில் ஆரம்பம்.

சென்ற சனிக்கிழமை மாலை இவ்வூர் காந்தி பெண்பாடசாலையில் "ஊழியன்" ஆசிரியர் ஸ்ரீமான் ராய. சொக்கலிங்கன் செட்டியார் அவர்கள் தலைமையில் மறியல் தொண்டர்கள் கூட்டம் நடைபெற்றது. தலைவர் முகவுரையாக சிறிது பேசியதும் ஸ்ரீமான் பொ. திருகூடசுந்தரம் பிள்ளை அவர்கள் தொண்டர்கள் நடந்துகொள்ள வேண்டிய முறைகளைப்பற்றிப் பேசினார். பிறகு தொண்டர்கள் பஜனை கோஷ்டியுடன் முக்கிய வீதிகளின் வழியாக கள்ளுக்கடைக்குச் சென்றார்கள். மறியல் வெகு ஒழுங்காக நடைபெற்றது. உள்ளூரிலிருந்தும், காரைக்குடி, கல்லுப்பட்டி முதலிய வெளியூர்களிலிருந்தும் ஏராளமான ஜனங்கள் வந்திருந்தது குறிப்பிடத்தக்கது. ஜனங்கள் சாந்தமுள்ளவர்களாக மறியலை கவனித்து வந்தார்கள். தொண்டர்கள் இரவு ௯-மணி வரை மறியல் செய்தார்கள் நேற்று ஒருவரும் குடிக்காதது குறிப்பிடத்தக்கது. காரைக்குடியிலிருந்தும், உள்ளூரிலிருந்து அனேக பிரமுகர்கள் விஜயம் செய்திருந்தார்கள். கீழ்கண்டவர்கள் மறியல் தொண்டர்களாக சேர்ந்திருக்கிறார்கள்.

௧. நாராயணய்யர் (தொண்டர்படைத் தலைவர். ௨. எஸ் பி நாச்சியப்பன் (உப தலைவர்) ௩. எம் த சோமன் ஆசாரி ௪. ஏ டி ராக்கப்ப செட்டியார், ௫. பீ சுப்பய்யா ௬. என் ராக்கப்பன், ௭. பே ஆர் ராக்கப்பன், ௮. ஆர் ஹாலாஸ்யநாதன், ௯. வீ. வெங்கடாஜலம், ௧௦. எம் செல்லம், ௧௧. கோவிந்தன், ௧௨. ஏ சுப்பய்யர், ௧௩. ஆர் எம் அண்ணாமலை, ௧௪. ஆர் இராமநாதன்.

---

### அமராவதிப்புதூர் மணிமேகலா சங்கம்.

இச்சங்கத்தின் வாரக்கூட்டம் வைகாசி ௨௨-தேதி ஞாயிற்றுக்கிழமை மாலை ௩-மணிக்கு காந்தி பெண் பாடசாலையில் கூடிற்று. அவ்வமயம், திருவாட்டி செல்வி பெரி. விசாலாட்சி தலைமை வகித்தாள். மறியலும் அதன் உபயோகமும், என்பதைப்பற்றிப் பேசப்பட்டது. சென்ற வாரத்தின் அறிக்கை படித்தபின்பு, மறியலைப்பற்றி மாணவிகள் பேசியதின் சுருக்கம் பின்வருமாறு:—"மறியல் என்றால் தடுத்தல், என்று பொருள். இப்பொழுது நமது நாட்டில், அன்னியத்துணி மறியல் கள்ளுக்கடை மறியல் என்பதைப்பற்றி தினம் பத்திரிகைகளில் பார்க்கிறோம். காரைக்குடியிலும் பார்த்தோம். இந்த மறியல் நன்கு நடைபெறுகிறது. ஒருவன் கெட்ட காரியத்தைச் செய்தால், அதைச் செய்யவேண்டாமென்று சொல்லியும் கேளாததினால், நாம் அதை வற்புறுத்த மறியல் செய்யவேண்டும். மறியலில் இரண்டு விதமுண்டு. சாத்வீகமான மறியல், என்றும், பலாத்கார மறியல் என்றும், இதில் சாத்வீகமான மறியல்தான் மிகவும் சிறந்தது. ஒவ்வொரு மனிதனுடைய அறிவுக்குத்தான் செய்தது நல்லது அல்லது கெடுதல் என்று தெரிந்துவிட்டால், அவன் கெடுதலை நீக்கி, நன்மை செய்வான். இப்பொழுது நமது நாடு விடுதலை அடையவேண்டுமானால், நாம் கைத்தொழிலையும், கல்வியையும், ஒற்றுமையும் வளர்க்கவேண்டும். அதற்கு நாம் நம்மிடத்திலுள்ள கெட்ட செய்கையை நீக்க வேண்டும். அதற்குத்தான் இம்மறியல் ஆரம்பமாயிருக்கிறது. இதனால் நாம் ஒற்றுமைப்பட்டு, சீக்கிரம் சுயராஜ்யம் பெற்று வாழ்வோமாக" பிறகு தலைவர் முடிவுரைக்குப் பின், அடுத்தவாரத்திற்கு பெண்களும், தேசசேவையும் என்று பேசுவதாக முடிவு செய்யப்பட்டு கூட்டம் முடிந்தது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

# வைசிராயின் முதற் பிரசங்கம்.

## சமீபத்தில் என் பாரங் குறையும்.

## சட்டவரம்பிற்கு உட்பட்டு விடுவேன்.

### தற்காலிக ராஜியையல்ல, சாசுவத சமாதானத்தையே வேண்டுகிறேன்.

வைசிராய் வெல்லிங்டன் பிரபுவுக்கு சிம்லாவில் ஜூன்மீ உ௦தேதி செம்ஸ்போர்டு கிளப்பில் ஓர் விருந்து அளிக்கப்பட்டது. அதற்குப் பதிலளிக்கையில், இந்திய அரசியலைப்பற்றி, முதன் முதலாகப் பகிரங்கமாக, பல விஷயங்களை அவர்கூறினர். விருந்துக்கு அநேகம் பிரமுகர்கள் விஜயம்செய்திருந்தார்கள். முதலில் ஸர் பி. எல். மித்தர் கிளப்பைப்பற்றிய சில விஷயங்களைப் பிரஸ்தாபித்தார். பின்னர் வில்லிங்டன் பிரபு பதிலளித்தார்.

**சமீபத்தில் எனது பாரங்குறையும்.**

அவர் இந்தியாவுக்குத் தாம் வந்ததிலிருந்து தமக்கு ஏற்பட்ட மனப்பதிவுகளைப்பற்றி இடையே பிரஸ்தாபித்தார். முதலில் தமக்குக் கிடைத்த வரவேற்பு வைபவத்துக்கு நன்றி செலுத்திவிட்டு, பிறகு அவர் கூறியதாவது:—

"சென்ற சில வாரங்களாக வைசிராயாக எனது கடமைகளைச் செய்து வருவதிலிருந்து, இன்னோர் விஷயம் என் மனத்தில் பதிந்துவிட்டது. ஒரு வைசிராய் செய்ய வேண்டிய வேலை, என்னைப் போன்ற வயது முதிர்ந்ததோர் கனவானால் தாங்கமுடியா மிக அதிகப்பாரமானதாகும் என்பது எனக்கு மிகத் தெளிவாகத் தெரிந்து விட்டது. ஆதலால், நான், அரசியல் சீர்திருத்தங்கள் சம்பந்தமான தங்கள் வேலைகளை, சம்பந்தப்பட்டவர் யாவரும் லண்டனுக்குச் செல்லும் பொழுது, விரைவாகப் பூர்த்தி செய்து முடிப்பார்கள் என்று சொல்லத் துணிகிறேன். இதனால், இங்கும் எனது வாழ்க்கை, கானடாவில் சட்டவரம்புக்குட்பட்ட கவர்னர்ஜெனரலாக வேலைபார்த்தகாலத்து சந்தோஷமான ஆண்டுகளையே மிகவும் ஒத்துவிடும்; எனது நிர்வாகக் கடமைகளிற் பலவற்றினின்றும், சீக்கிரத்தில் நான் விடுதலைபெற்று விடுவேன்."

**முதன் மந்திரியின் சமீப அறிக்கை.**

பிறகு, இந்தியாவின் பொருளாதார நெருக்கடியைப் பற்றிப் பிரஸ்தாபிக்கையில், சென்ற சில தினங்களில் நடைபெற்றுள்ள சில நம்பிக்கை தரும் நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டார். அவர் கூறியதாவது:—

"முதலாவதாகவும் மிக முக்கியமாகவும், நேற்றுதினம் காமன்ஸ் சபையில் பிரிட்டிஷ் பிரதம மந்திரி வெளியிட்ட அறிக்கையை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இந்நாட்டிலுள்ள எல்லாக் கட்சியாரும், அவரை இந்தியாவின் உண்மையான நண்பரென ஆங்கீகரித்தனரென்பதெனது நம்பிக்கை. அவருடைய நேசத்துக்கு, அவர் தரக்கூடிய மிகத்திட்டமான உறுதி இவ்வறிக்கையைவிட வேறென்றுண்டோ? இந்தியாவின் பொருநிலைமை மிகக் கஷ்டமாயிருக்கும் இந்தச் சமயத்தில், இந்தியாவுக்குப் பொருளாதார உதவி செய்வதாக, தயாளமான வாக்குறுதியைப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் தந்துளார்கள். இந்தியாவுக்கு உதவி புரியவும், வெற்றி கிடைக்குமென்ற உண்மையான நம்பிக்கைகள் ஏற்படத்தக்கவிதமாகப் புதிய அரசியல் திட்டத்தைத் துவங்குவதைச் சாத்தியமாக்கக்கூடிய நிலைமைகளை உண்டாக்கவும் தங்களுக்குள்ள விருப்பத்திற்கு, இதனுல், பிரிட்டிஷ் அரசாங்கத்தார் உருசு அளித்துவிட்டார்கள்."

**யுத்தக்கடன் நிறுத்தம்.**

மேலும், சமீபத்தில் அமெரிக்க ஐக்கிய ராஜாங்கக் குடியரசுத் தலைவர், சர்வதேசங்களுக்கும் சென்ற யுத்தக் கடனைச் செலுத்துவதைத் தற்காலிகமாக நிறுத்தி வைப்பதைப்பற்றி விடுத்த அறிக்கையால், ஏற்பட்டுள்ள சௌகரியத்தைத் தெரிவித்தார். நடைமுதல் வருடத்தின் ஒரு பகுதியிலும், அடுத்த வருடத்திய ஒரு பகுதியிலுமாக, யுத்தக் கடனைச் செலுத்துவதை நிறுத்துவதால், இந்தியாவுக்குத் தற்காலிகமாகக் குறையக்கூடிய சுமை ஆறு லட்சம் பவுன்களெனத் தெரிவித்தார்.

**போலீஸுக்கும் ராணுவத்துக்கும் பாராட்டு.**

பிறகு தற்கால அரசியல் நிலைமையைப் பற்றிப் பேசத் திருப்பினர். அப்பொழுது அவர் போலீஸையும் ராணுவத்தையும் பாராட்டி யுரைத்ததாவது:—

"இவ்விரு இலாக்கா உத்தியோகஸ்தருக்கும் ஊழியருக்கும், எனது ஆழ்ந்த பாராட்டுதலைச் சந்தோஷத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். மிகக் கவலைக்கிடமான காலங்களிலும், மிகக் கோபமூட்டப்பட்ட சமயங்களிலும், இவர்கள் ராஜபக்தியுடனும், உறுதியுடனும், தன்னடக்கத்துடனும் தங்கள் கடமைகளை ஆற்றியிருக்கிறார்கள். அவர்களது நேர்த்தியான சேவைக்காக, அமைதியை விரும்பும் எல்லா இந்தியப் பிரஜைகளது நன்றியை அவர்கள் சம்பாதித்து விட்டார்கள், இன்னும் சம்பாதித்து வருகிறார்களென்று அவர்களுக்கு நான் உறுதியாகச் சொல்லுகிறேன்."

**காந்தி-இர்வின் உடன்படிக்கையும் மகாநாடும்.**

மேலே தொடர்ந்து அவர் உரைத்ததாவது:—

"இல்லை, ஐயா! இவ்விரவில் எனது காரியம் தற்பொழுதைய இந்திய நிலைமையைப் பற்றிப் பேசுவதேயாகும். நான் இங்கு வந்து சேர்ந்தவிட இப்பொழுது இரண்டு முக்கிய அரசியல் விஷயங்கள் பொதுஜனங்கள் மனத்தில் மிகுதியும் இடம் பெற்றிருப்பதாகக் காண்கிறேன். இவற்றுள் முதல் விஷயம், எனக்கு முந்தியிருந்த வைசிராய் இர்வின் பிரபுவுக்கும், காங்கிரஸ் தலைவர் திரு. காந்தி அவர்களுக்கும் மார்ச்சு-மீ ௫-உ ஏற்பட்ட ஒப்பந்தமாகும். இரண்டாவது விஷயம், நான் இந்தியாவுக்கு வந்து சேர்ந்த சில மாதங்களுக்கு முன்பு லண்டனில் தனது பூர்வாங்க வேலைகளைச் செய்து முடித்த வட்டமேஜை மகாநாட்டின் வேலைகளை மேலே நடத்துவதற்குச் சீக்கிரமான ஏற்பாட்டைச் செய்வதன் அவசியமாகும்.

**ஒப்பந்தத்தை நிறைவேற்றுதல்.**

"இவ்விஷயங்களில் முதலாமதைப் பற்றி நான் ஒரே விஷயத்தைக் கூற விரும்புகிறேன். இந்த ஒப்பந்தத்தைப் பூர்த்தி செய்யும் வேலையை நான் மேற்போட்டுக் கொண்டுளேன். மாகாண அரசாங்கங்களின் உதவியைப்பெற்று, இதன் நிபந்தனைகள் பூர்த்தியாகுமாறு, பூரண உண்மையோடும் நான் முயற்சிப்பேன். நான் திரு. காந்தியுடன் ஒரு சம்பாஷணை செய்தேன். அதனின்றும், தமது தரப்பில் இவ்வொப்பந்த நிபந்தனைகளை நிறைவேற்றிவைக்க என்னைப் போலவே உண்மையோடு அவரும் விருப்பங்கொண்டிருக்கிறார் என்பதை, பூரண நம்பிக்கையுடன், சந்தோஷமாக நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

**போராட்டத்திற்குத் தயாராகவா?**

"ஆனால், இது சம்பந்தமாக இந்த ஒரு விஷயத்தைத் தெரிவித்துக்கொள்ள, நான் கடமைப்பட்டிருக்கிறேன். பத்திரிகைகளில் சில மனிதர்களுடைய அறிக்கைகளையும் பிரசங்கங்களையும் அடிக்கடி நான் கண்டிருக்கிறேன். அவர்கள் இந்த ஒப்பந்தம் சாசுவத சமாதானத்திற்கானதோர் ஒப்பந்தமல்லவென்றும், அடுத்த போராட்டத்திற்குத் தயாராவதற்குச் சாவகாசம் தருவதற்காக ஏற்பட்ட தற்காலிகமான ராஜியேயாகுமென்றும் அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறார்கள். நான் முற்றிலும் வெளிப்படையாகப் பின்வரும் விஷயத்தைச் சொல்ல விரும்புகிறேன். இர்வின் பிரபுவாலும் திரு. காந்தியவர்களாலும் கண்ணியமான முறையில் செய்துகொள்ளப்பட்ட இந்த ஒப்பந்தத்தைப் பூர்த்தி செய்வதற்கு, இது நேர்மையான வழியல்லவென நான் கருதுகிறேன்.

**நான் விரும்புவது சாசுவத சமாதானத்தையே.**

"நான் வேண்டுவது சாசுவத சமாதானத்தையே, தற்காலிக ராஜியையல்ல; நாட்டின் சிறந்த நன்மைகளைச் சிந்தையிற் கொள்ளும் யாவரும் என்னைப் போலவே சாசுவத சமாதானத்தை விரும்ப வேண்டிக்கொள்ளுகிறேன். ஏனெனில், சாசுவத சமாதானத்தின் மூலமாகவே, இந்தியாவின் வருங்காலப் பொருளாதார, அரசியல் முன்னேற்றங்களை நாம் அடையவியலும்; போராட்டத்தினின்றும் கிளர்ச்சியினின்றும் தப்பித்துக்கொண்டு, ஒத்துழைப்பையும் பரஸ்பர நல்லெண்ணத்தையும் வளர்த்துக் கொள்ளுவதே இந்த ராஜியின் நோக்கமாகும், இதனால், முக்கியமாக இந்தச் சமயத்தில், வருங்கால அரசியல் முன்னேற்றத்திற்கான வேலையைச் செய்ய எவ்வழியிலும் உதவியாக விருக்கத்தக்க நிலைமையும் உண்டாகும்—இதுவே எனது திட நிச்சயமாகும்."

**அடுத்த மகாநாடு செப்டம்பர் மாதம் ரு தேதி துவங்கும்.**

பிறகு, அடுத்த வட்டமேஜை மகாநாடு கூடுவதைப்பற்றிய ஏற்பாடுகளை விவரித்தார். செப்டம்பர் மீ ரு-உ அடுத்த வட்டமேஜை மகாநாட்டைக் கூட்டத் தீர்மானித்திருப்பதாகவும் தெரிவித்தார். உத்தியோகஸ்தரும், உத்தியோகஸ்தரல்லாதாரும், சகலநிற, ஜாதி, மதத்தினரும் வேற்றுமையின்றி தற்பொழுதைய ராஜி நிபந்தனைகளை நிறைவேற்ற ஒத்துழைத்து, சீர்திருத்தச் சர்ச்சையைத் தொடர்ந்து நடத்தத் தக்க நன்னிலைமையை உண்டாக்க வேண்டுமென வேண்டிக்கொண்டார்.

**தொடர்பைக் காப்பாற்ற முடியுமோ?**

பின்னர், இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கு மிருந்துவரும் தொடர்பைக் காப்பாற்றுவது பற்றி அவநம்பிக்கையும், ஐயங்களும் நிலவுவதைத் தாம் காண்பதாகவும், மிகப்பெரும்பான்மையோரான சுதேச மன்னர்களும் இந்திய மகாஜனங்களும் பிரிட்டிஷ் தொடர்பு இருந்து வரவேண்டுமெனவே விரும்புவரெனத் தமக்குத் திட நிச்சயமிருப்பதாகவும் சொன்னர்.

**சீக்கிரத்தில் இந்தியா முற்றிலும் சமத்துவப் பங்காளியாகும்.**

அவர் தொடர்ந்துரைத்ததாவது:—

"இந்த நாட்டு ஆட்சியின் தன்மை, இறந்த காலத்திலிருந்ததினும், வருங்காலத்தில் மாறுபட்டிருக்கும் என்பது முற்றிலும் உண்மையாகும். ஏனெனில், இந்தியர் தங்கள் காரியங்களைத் தாங்களே ஏற்று நிர்வகிக்கும் காலத்தை நோக்கி, இந்தியா பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திலுள்ள பிற குடியேற்ற நாடுகளுடன் முற்றிலும் சமத்துவப் பங்காளியாகும் காலத்தை நோக்கி, நாம் யாவரும் மிக விரைவாக உழைத்துக் கொண்டிருக்கிறோம்."

என்றும், வருங்கால ஆட்சி பிரிட்டிஷ் கொடியின் கீழேயே இருக்கும் என்றும், ஜார்ஜ் சக்ரவர்த்திக்கு ராஜபக்தி செலுத்துவதில் நாம் யாவரும் ஒற்றுமையாயிருப்போமென்றும் தாம் முற்றிலும் நம்புவதாகத் தெரிவித்தார்.

**சட்டவரம்புக் குட்பட்டுவிடுவேன்.**

இறுதியில் அவர் கூறி முடித்ததாவது:—

"இந்தியாவுக்குப் புறப்பட சில வாரங்களிருந்தபொழுது, லண்டனில் நான் கூறியதையே மறுபடியும் கூறுகிறேன். விசுவாசத்துடனும், நம்பிக்கையுடனும், நன்மையாகவே முடியுமென்ற எண்ணத்துடனும்—நாம் ஒரு விதமாக ஆரம்பித்து விட்டால் ஒரு வழி விடும் மகாசக்தி யொன்றுண்டென்ற பூரண நம்பிக்கையுடனும்—இம்மாண்பு மிக்க நாட்டின் நலத்துக்கும் க்ஷேமத்துக்குமாகப் பரஸ்பர நம்பிக்கையுடனும் நல்லெண்ணத்துடனும் நாம் யாவரும் ஒத்துழைக்க அதே மகாசக்தி நம் யாவருக்கும் கிருஸ்து தர்ம உணர்வைத் தருமென்ற நம்பிக்கையுடனும் (கிருஸ்து தர்மம் என்ற வார்த்தையை அதன் மிக அகண்ட தாராளப் பொருளிலேயே உபயோகிக்கிறேன்) எனது வேலைகளை ஆற்ற நான் முன் செல்லுகின்றேன், எனது உத்தியோக காலம் முடிவடையுமுன்னரே நான் இன்னும் மிக அதிகமாகச்சட்டவரம்பிற்குட்பட்ட கவர்னர் ஜெனரலாகி விடுவேன் என்றும், சீக்கிரமாகவே இந்த நாடு மறுபடியும் நிச்சயமும் பெருகிக் கொண்டிருப்பதுமான செல்வச் செழிப்பின் பாதையை அடைந்து விடும் என்றும் நன்னம்பிக்கை கொண்டுளேன்."

## இந்தியாவின் பொருள் நிலை.

### தேவையானல் பிரிட்டன் உதவும்.

ஜூன்-மீ உசு-உ பிரிட்டிஷ் காமன்ஸ் சபையில் இந்தியாவின் செல்வ நிலையைப் பற்றியகேள்விக்கு திரு. ராம்ஸே மாக்டொனல்டு பதிலளிக்கையில் கூறியதாவது:— "உறக்கத்தினுல் இந்திய அரசாங்கத்திற்கு ஏற்பட்டுள்ள செல்வ விஷயக் கஷ்டம் அரசியல் திருத்தம் சம்பந்தமான விவாதங்களினுல் இன்னும் அதிகரித்திருக்கிறது. முக்கியமாகச் செல்வ விஷயமான பாதுகாப்பைப் புதிய அரசியல் திருத்தத்தில் சேர்ப்பது குறித்து, இந்தக் கஷ்டம் அதிகரித்திருக்கிறது. செல்வ மதிப்பு எவ்விதத்திலும் குறைவுபட வில்லையெனத் திட்டமாக ஏற்படாதபட்சத்தில் இப்பொழுது உத்தேசிக்கப்படும் அரசியல் சீர்திருத்தம் அமுலுக்கு வருவதற்கில்லை. இந்தியாவின் செல்வ மதிப்பையும், சரியான அரசாங்க ஸ்திதியையும் பாதிக்கக்கூடிய நிலைமை யேற்படாதவாறு செய்யப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் தீர்மானித்திருக்கின்றனர். இப்பொழுது இவற்றிற்கு இந்தியா மந்திரி ஜவாப்தாரியாக விருக்கிறார். அரசியல் திருத்த விஷயம் முடிவு செய்யப்படுவதை முன்னிட்டும், எதிர் காலத்தில் இந்தியாவின் செல்வ மதிப்பை நிலைக்கச் செய்ய அரசியல் அமைப்பில் ஏற்பாடு செய்வதை முன்னிட்டும், அவசியமேற்பட்டால், தகுந்த நிபந்தனைகளின் பேரில் இந்திய அரசாங்கத்திற்குச் செல்வ உதவி செய்யப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் தீர்மானித்திருக்கின்றனர்."

## தேசியக்கொடி வணக்கம்.

சென்ற ஞாயிற்றுக்கிழமை இரவு மணி எ க்கு இவ்வூர் காந்தி சவுக்கத்தில் தேசியக் கொடிவணக்கம் நடைபெற்றது. முதலாவதாகத் தொண்டர்கள் யாவரும் தேசிய கீதங்கள் பாடிக்கொண்டு தேசியக்கொடிகளுடன் ஊர்வலமாக காந்தி சவுக்கத்திற்கு சென்று சேர்ந்தது. அப்பொழுது ஜில்லாக் காங்கிரஸ் காரியதரிசி திரு. பொ. திருகூடசுந்தரம் அவர்கள் தேசியக்கொடி ஏற்றினர். தொண்டர்கள் கொடிவணக்கம் செய்து தேசிய கீதம் பாடினர்கள். பின்னர் தேசியக்கொடியின் பெருமை பற்றி திருகூடசுந்தரம் அவர்கள் நீண்டநேரம் பேசினர். ஏராளமான பெண்மணிகளும் சுமார் ஆயிரம் ஆடவர்களும் கூட்டத்திற்கு வந்திருந்தார்கள்.



## ரப்பருக்கு விமோசனம்.

ரப்பர் உற்பத்தி செய்வதை கட்டுப்படுத்தும் விஷயமாக ஓர் முடிவு வெகு சீக்கிரம் முடியுமென்று 'ஹாண்டல்ஸ் பிளாடு' என்ற ஓர் டச்சுப்பத்திரிகை கூறுகிறது. மேலும் அப்பத்திரிகை பின்வருமாறு கூறுகிறது:—

"சிறிய பாக்டரிகளை யெல்லாம் மூடிவிடுவதென்ற யோசனை கைவிடப்பட்டது. (ஈயத்திற்கு ஏற்பட்டிருப்பதுபோல்) ரப்பருக்குக் கோட்டா திட்டம் கூடிய சீக்கிரத்தில் அனுஷ்டானத்துக்கு வந்து ஜயமளிக்குமென்று நம்ப இடமிருக்கிறது. சுதேசிகளின் ரப்பர் உற்பத்தி வருஷத்தில் க௦,000 டன்களுக்குமேல் போகாமல்குறைத்து,பாக்டரிகளில்கக௨கூ-ம்வருஷ உற்பத்திக்கு முக்கால்பாகமே உற்பத்தி செய்யவேண்டுமென்று கட்டுப்படுத்துவதே திட்டத்தின் முக்கியாம்சமாகும். பாக்டரிகளில் இருப்புகள் குவியாமலிருக்க வேண்டிய முயற்சிகள் எடுத்துக் கொள்ளப்படும். இந்த ஏற்பாட்டின்படி சுதேசி ரப்பர் உற்பத்திக்காரர்களை இது கட்டுப்படுத்துவதாகாது. இந்த ஏற்பாட்டை டச்சு கவர்ன்மெண்டு அனுஷ்டானத்துக்குக் கொண்டுவருவதாயிருந்தால் பின்னர் உற்பத்திக்காரர்களுக்கும், லண்டன் ரப்பர் உற்பத்தியாளர் சங்கத்துக்கும் அதிகத் தொடர்பு ஏற்படும். அதன் பயனுக பிரிட்டிஷ் ரப்பர் தோட்டக்காரர்களின் ஒத்துழைப்பும் கிடைக்கும்.

இந்தக் கட்டுப்பாடு விஷயமாக மலேயா நாட்டிலுள்ள சில முக்கியஸ்தர்கள் தங்கள் அபிப்பிராயங்களை வெளியிட்டிருப்பதாக 'தமிழ் நேசன்' எழுதுகிறது. அவருள் மிஸ்டர் எச்மாண்ட் ஹேக் கூறியதாவது:— இந்தச் செய்தியில் விஷயம் விளக்கமாயில்லாததால் இதைப்பற்றி இப்பொழுது யாதொரு திடமான அபிப்பிராயமும் கூறுமலிருப்பது நலம். இருந்தபோதிலும் இச்செய்தி மிகுந்த தைரியமளிக்கக் கூடியதாயிருக்கிறது. டச்சுக்காரர்கள் சரியான வழிகளுல் ரப்பரைக் கட்டுப்படுத்த முன் வந்தது பாராட்டத்தக்கது.

பெயரை வெளியிட விரும்பாத மற்றொரு பிரபல ஐரோப்பியர் கூறியதாவது:— எல்லா நாடுகளும் இத்திட்டத்தின்கீழ் ஒத்து நடந்தால் வருஷத்தில் கக௦,000 டன்களே அதிகமாயிருக்கிறது. ஆகையால் இந்தத் திட்டத்தின்படி ஒவ்வொரு வருஷமும் இப்பொழுதுள்ள அதிகப்படியான மிதமிஞ்சியிருக்கும் ரப்பர் இருப்பில் கூ௦,000 வீதம் குறைந்துகொண்டு வரும். ரப்பர் உற்பத்தியை க௦௦-க்கு உ௫ குறைத்தது போதாது. குறைந்தது க௦௦-க்கு ச௦ வீதமாவது குறைக்க வேண்டும். ஆனுல், ஒரு விஷயம் கவனிக்கத்தகுந்தது. டச்சுக் கிழக்கிந்தியத் தீவுகளிலுள்ள சுதேசி உற்பத்தியைக் குறைப்பதில்லை யென்றுல், மலாயா சுதேசி ரப்பர் உற்பத்தியின் கதி என்ன? எந்த ஏற்பாடும் எங்கும் ஒருவித நியாயமானதாயிருக்கவேண்டும்.

கனம் டான் செங் லாக் கூறியதாவது:— டச்சு ஏற்பாட்டிற்கு பலத்த ஆக்ஷேபம் ஏற்பட இடமிருக்கிறது. சுமாத்திராவிலுள்ள டச்சு சுதேசிகளின் தோட்டங்களையும், அவைகளை அதிகப்படுத்தி அபிவிருத்தி செய்து கொள்ள ஏராளமான வசதிகளையும் பார்த்ததிலிருந்து, சுதேசிகள் மேலும் பயிரிட்டு விஸ்தீரணத்தை அதிகப்படுத்தாது கட்டுப்படுத்தாவிடில் மலாயாவிலுள்ள சிறு தோட்டக்காரர்களும் சரி, பெரிய தோட்டக்காரர்களும் சரி யாதொரு திட்டத்துக்கும் சம்பாதிக்கமாட்டாரெனத் தெரிகிறது. பாதிப்பேரை மட்டும் கட்டுப்படுத்தும் யோசனையை லக்ஷியம் செய்வாரில்லை. ஏனெனில் கட்டுப்பாட்டின் பயனுக ஒரு வேளை விலை யேறிவிட்டால் உடனே சுதேசி தோட்டக்காரர்கள் மேலும் ரப்பர் பயிராக்க ஆரம்பிப்பார்கள். அதனுல் மீண்டும் மிதமிஞ்சிய உற்பத்தி யேற்பட்டுப் பழையகதையாகவே முடியும். ஆகையால் எவ்வித ஏற்பாட்டிலும், மேலும் ரப்பர் பயிரிடுவதையே முதலில் தகுந்த முறையில் கட்டுப்படுத்தவேண்டும்.





## நாட்டுக்கோட்டை செட்டியார்களின் வர்த்தக சங்கம்.

### ஐக்கிய மலாய் நாடு.

கோலாலம்பூரிலுள்ள தலைமைக் காரியாலயத்தின் நான்காவது நிர்வாகஸபைக் கூட்டம்:—

பிரஜோற்பத்தி-ஞு வைகாசி-மீ ௩௧-உ மாலை (௩௬-௬-௩௧) எ-மணிக்குச் சங்க கட்டிடத்தில் திருவாளர் அரு. சி. பெரியகருப்பன் செட்டியாரவர்கள் தலைமையின்கீழ் கூட்டம் நடைபெற்றது. அதில் நிறைவேறிய முக்கிய தீர்மானங்கள் வருமாறு:—

நமது சங்க தலைவர் திருவாளர் கவீ. அழ. அழ. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் காலஞ்சென்றதைக் குறித்து நமது சங்க அங்கத்தினர்களின் அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறது.

காரியதரிசி திருவாளர் சா. வீர. வீரப்ப செட்டியாரவர்களும் பொக்கிஷதார் திருவாளர் சொ. மா. வீரப்பசெட்டியாரவர்களும் கொடுத்த ராஜிநாமாவை அங்கீகரிக்கப்பெற்றது.

திருவாளர் க. வீ. அழ. மூ. ராமசாமி செட்டியாரவர்களை தலைவராகவும் நா. சுப. ராம. மெய்யப்ப செட்டியாரவர்களை பொக்கிஷதாராகவும் திருவாளர் பெரி. நா. நா. கடை ஏஜண்டு ராம. நாகப்பசெட்டியாரவர்களை காரியதரிசியாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டது.

ஜெனரல் பர்பஸ் கமிட்டிக்கு ௫௦-௦-௦ நன்கொடை கொடுக்க அனுமதிக்கப்பெற்றது.

பர்மாவில் நம்மவர்களுக்குக் கலகக்காரர்களால் அளிக்கப்படும் தீங்குகளைக் கவனித்துத் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளும்படி இந்தியா மந்திரி ராஜப்பிரதிநிதி பர்மா கவர்னர் ஆகியவர்களுக்குத் தலைவர்மூலம் தந்தி கொடுப்பதென தீர்மானம் செய்து தந்தியும் கொடுக்கப்பட்டதெனக் காரியதரிசி அறிவிக்கிறார்.

## மனக்கால் ஐயம்பேட்டை மகா கும்பாபிஷேகம்.

மனக்கால் ஐயம்பேட்டை என்னும் திருப்பெருவேளூர் க்ஷேத்திரத்தில் சுவாமி, அம்மை சோமாஸ்கந்தர் முதலிய மூர்த்திகளின் கெர்ப்பக்கிரகம், அர்த்த மண்டபம், விமானம், கட்டுமலை, இராஜகோபுரம் முதலிய புதுப்பிக்கப்பெற்று பூர்த்தி ஆகி மேற்படி ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ அபின்னும்பாள் சமேத ஸ்ரீ அவிபக்தேஸ்வர சுவாமிக்கு நிகழும் பிரஜோத்பத்தி-ஞு ஆனி-மீ கஎ-உ(௧-எ-௩௧) புதன்கிழமை பிரதமை திதியும் உத்திராட நக்ஷத்திரமும் அமிர்தயோகமும் கூடிய சுப தினத்தில் உதயாதி நாழிகை ௧-இக-க்கு மேல் உ-௩௦ அளவில் மிதுன லெக்னத்தில் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் நடைபெறும். அன்று இரவு ஐம்பெருங்கடவுளர் திருவுலாப் போந்தருளும் திருக்கோலக் காட்சி நடைபெறும் என்று ராம. அரு. அரு. ராம. அருணுசலம் செட்டியார், அறிவிக்கிறார்.

# பர்மா நிலைமை.

## ஸ்ரீமதி சாரளாதேவி அறிக்கை.

### கலகத்துக்குக் காரணர் யார்?

### கவர்னர் பேச்சும் தூண்டுதலோ?

சமீபத்தில் பர்மா சென்று, அங்கு பர்மா ஹிந்துக்கள் மகா நாட்டிற்குத் தலைமை வகித்துத் திரும்பியுள்ள ஸ்ரீமதி சாரளா தேவி சௌத்ராணி, பத்திரிகைகளுக்கு ஓர் அறிக்கை வெளியிட்டுளார். "அமிர்தபஜார்"ப் பத்திரிகையில் காணப்படும் அவ்வறிக்கை வருமாறு:—

**முந்தி ஒன்றுமறியேன்.**

பர்மா மாகாண ஹிந்துக்கள் மகா நாட்டில் தலைமை வகிக்க நான் ஒருமாத காலத்திற்குமுன் இந்தியாவை விட்டுப் புறப்பட்ட பொழுது, பர்மாவிலிருந்து வரும் உண்மை நிலையையாவது, இந்தியர்களுக்கு விரோதமாக அங்கிருந்து வரும் உணர்ச்சியையாவது, அதிகாரிகளுடைய ஆதரவால் அதைப் பெருக்குவதற்குச் செய்யப்பட்டு வந்த பிரசாரத்தைப்பற்றியாவது எனக்கு ஒன்றுமே தெரியாது.

**கவர்னர் பேச்சுப் பகைப் பிரசாரமா?**

ஸர் சார்லஸ் இன்ஸ் முதலாவது பட்டமளிப்புப் பிரசங்கத்திலேயே இந்தியர்களுக்கும் சீனக்காரர்களுக்கும் பாதகத்தை உண்டுபண்ணத்தக்க வழியில் பர்மியர்களிடத்தில் அதிக அன்பு ததும்பப் பேசினரென்று சொல்லப்படுகிறது. அரசாங்கத்தின் கையாட்களும் அந்தப் பிரசாரத்தை மேற்கொண்டு வெகு உற்சாகமாக நடத்திவந்தனர். ௧௯௩0-ம் வருஷம் ரங்கூனில் நடந்த கூலிகள் படுகொலைக்குப் பிறகு (இந்தக் குற்றத்திற்கு அரசாங்கத்தார் இதுவரை ஒருவரையும் ஜவாப்தாரியாக்கவுமில்லை; ஒருவரையும் சிட்சிக்கவுமில்லை.) பிரிவினை உணர்ச்சி மேலிட்டுப் பிரிவினைக் கோஷ்டியினர் பர்மாவெங்கும் இந்தியர்களுக்கு விரோதமாகப் பிரசாரம் செய்தனர். ஜில்லாக்களில் இந்தியர்கள் கொல்லப்பட்டும் கொள்ளையிடப்பட்டும் வந்தனர்; அவர்களுடைய வீடுகளும் குடிசைகளும் கொளுத்தப்பட்டன. அதிகாரிகள் இதைத் தடுக்காமலே இருந்து வந்தனர்.

**அவர்களுக்கே திகில்.**

கடைசியாக அவர்களே வேறுவழியின்றி அடியிற்கண்ட அறிக்கையை வெளியிட்டாக வேண்டி வந்தது:— "இந்தியர்களையும் சீனக்காரர்களையும் பர்மாவைவிட்டு விரட்டிவிட வேண்டுமென்று பர்மிய பாஷையில் எழுதப்பட்டோ, அச்சடிக்கப்பட்டோ உள்ள துண்டுப் பிரசுரங்கள் விரிவாக விநியோகிக்கப்பட்டு வருகின்றன. இத்தகைய துண்டுப் பிரசுரங்களை அச்சிடுவதோ எழுதுவதோ விநியோகிப்பதோ கிரிமினல் குற்றமாகும். இவைகளின் கர்த்தாக்களைக் கைதுசெய்து சிட்சைக்குக் கொண்டுவருவதற்கு வேண்டிய தகவல்களைப் போலீசாருக்கு அறிவிப்போருக்குத் தாராளமாகப் பரிசு வழங்கப்படும்."

**யார் பாதுகாப்பார்கள் என்பதறியா ஏழை இந்தியர்.**

மார்ச்சு மாதம் எ-ம் தேதி முதல் உ௪000 சிட்டகாங்கியர்களும், உ௧௯000 தமிழர்களும், ௪எ000 கொரியா, தெலுங்கு விவசாயிகளும், வெளி ஜில்லாக்களில் தனித்திருந்த ஆயிரக் கணக்கான ஹிந்துஸ்தானியர்களும் தங்களுடைய கால் நடைகளை அழிந்த விலைக்கு விற்றுவிட்டு, இந்தியாவுக்குத் திரும்பிவிட்டார்களென்று சொல்லப்படுகிறது. இந்தியாவில் யார் பாதுகாப்பார்களென்பது தெரியாமலே அவர்கள் ஓடிவந்திருக்கிறார்கள். அவர்களிற் பலர் பர்மாவிலேயே பிறந்து வளர்ந்தவர்களாதலால், இந்தியாவைப்பற்றி அவர்கள் கேள்விப்பட்டிருப்பதைத் தவிர வேறு ஒன்றும் அவர்களுக்குத் தெரியாது.

**வியாபாரமும் வேளாண்மையும் தொலைந்தன.**

ரங்கூன் மொகல் தெரு வர்த்தகர்களும் நடுங்கிக்கொண்டிருக்கிறார்கள்: இப்போதைய நிலைமையே நீடித்திருக்கும்படி விட்டுவைத்து இந்தியர்களுக்கு விரோதமான முயற்சிகளை அரசாங்கர் அடக்காமலிருந்துவிடின் அங்கும் என்றேனும் ஒருநாள் ஆபத்து ஏற்பட்டுவிடும். எங்கும், வியாபாரம் வைத்தது வைத்ததுபோலிருக்கிறது; சாகுபடி செய்வோரில்லாததால் அரசாங்கத்தினிடம் முக்கிய வருமான இனமாகிய நிலங்கள் திருப்பி ஒப்புவிக்கப்படுகின்றன; நெற்பயிர் மூலமாக அரசாங்கத்துக்குச் சில வருஷங்கள் வரை எவ்வித வருமானமும் கிடைப்பதற்கு வழியில்லை.

**இந்தியரைக் கொலை செய்யப் பத்திரிகைகளின் ஆதரவு.**

ஆனல் கலகக்காரர்களுக்கும் இந்தியர்களுக்கு விரோதமான பிரசாரத்திற்கும் எவ்விதச்சம்பந்தமுமில்லையென்பதை முக்கியமாக ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். அவர்கள் பிரிட்டிஷாரிடத்திலேயே விரோதபாவமுடையவர்களாகவிருக்கிறார்கள். ஆனல் குற்றநோக்கமுள்ள உயர்ந்த வகுப்பினர்களிலும் தாழ்ந்தவர்களிலும் கலகத்தை வியாஜமாக வைத்துக்கொண்டு இந்தியர்களுக்கு ஹிம்சையைச் செய்து வருகிறார்கள். பிரிவினையை ஆதரிக்கும் பர்மியப் பத்திரிகைகளும் ஒன்றோடொன்று போட்டிபோட்டுக் கொண்டு இந்தியர்களைக் கொலை செய்வதையும் அவமதிப்பதையும் ஆதரித்தெழுதி வருகின்றன. இப்பத்திரிகைகள் விஷயத்தில் ஸர் சார்லஸ் இன்ஸின் அரசாங்கத்தார் ஒன்றும் செய்யாமலிருந்துவிட்டனர். பழையகாலப் பர்மிய ராஜாக்களுடைய மனோபாவம் பர்மாவிலுள்ள பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கும் ஏற்பட்டுவிட்டதாகக் காண்கிறது. இந்தியர்களுக்கு விரோதமானவர்களுடைய கையாட்களாக இருந்து அவர்களுக்கு ஒத்தூதிக்கொண்டிருந்த பிரிவினைக்கோஷ்டியினர் தங்களுடைய தொனியை இப்பொழுது சிறிது மாற்றிக்கொண்டனர்.

**ஒரு பத்திரிகையின் பலத்த கண்டனம்.**

"பர்மா எக்ஸ்சேஞ்ச் கெஜெட்" பத்திரிகை மே மாதம் உ0-ம் தேதி எழுதியுள்ள அடியில்கண்ட வாக்கியங்களைப்பற்றி அவர்கள் ஆலோசித்து வருகிறார்கள். "பர்மா இப்பொழுது குறுக்கு ரஸ்தாக்களில் வந்துநிற்கிறது. அதில் சிறிதும் சந்தேகமில்லை. தாங்களே தங்களுடைய ஆட்சியை நடத்திக்கொள்ளுவதற்காவது, அல்லது நாகரிகம் வாய்ந்த பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் தங்கள் தேசமும் ஒரு அங்கமென்று கருதப்படுவதற்காவது தங்களுக்குள் எவ்விதக் கட்டுப்பாடுமில்லையென்ற அபிப்பிராயத்தை அவர்கள் உலகெங்கும் ஏற்படுத்திவருகின்றனர். பொருளாதாரத்துறையில் சிறிதுகஷ்டமேற்பட்டதுமே அவர்கள் பொறுமையின்மையையும் சகிப்புத்தன்மை இல்லாமையையும் காட்டிக்கொள்ளுகின்றனர். இதுவும், நெறிகெட்ட சில தலைவர்களுடைய வெட்டிப்பேச்சுக்களும் சில லட்சம் ஜனங்களே உள்ள சிறிய தேசங்களுக்கும்பெரியகுறைகளாகும். இதிலிருந்து அக்கம் பக்க தேசங்களுடன் சரிசமத்துவமான நிலைமையில் அது போட்டிபோட முடியாதென்பது நிரூபணமாகிறது. இதனல் துவேஷமுண்டாகிறது. இது அபாயகரமானது."

**தம் பிசகு தெரியாமல் பிறரையே தூஷிப்பவர்.**

தீபா ராணியைப்போல் பர்மியர்கள் இதற்கு ஒரேவார்த்தையில்தான் பதில் சொல்லுவார்களென்று நான் நினைக்கிறேன். "மந்திரிகளும் அவர்களுடையகோஷ்டியினரும் எப்பொழுதும் பிசகு செய்துகொண்டு, மற்றவர்களைத் தூஷித்துக்கொண்டுருப்பார்கள்" என்பதுதான் அந்தப்பதில்.









**கலகத் துவக்கம்.**

பர்மா "சுதந்திரன்" பத்திரிகை பின் வருமாறு எழுதுகிறது:—

பர்மாவில் பல ஜில்லாக்களிலும் கடந்த டிசம்பர் மாதம் முதல் கலகங்கள் ஏற்பட்டு நாளுக்குநாள் வளர்பிறைச் சந்திரனைப் போல் விருத்தியாகி, அதன் முடிவு யாதாகுமோவெனச் சகலரும் தியங்குகின்றனர். அதிகாரிகளும் தங்கள் புத்திக் கெட்டிய மட்டும் சக்திக்கேற்றவாறும் இக்கலகங்களை அடக்குவதற்கு முயற்சி செய்து வருகிறார்களென்பது வெளிப்படை. ஆயினும் அதனல் எப்பயனும் இதுவரையிலும் விளைந்ததாகக்கூற முடியவில்லை. ஆரம்பத்தில் கலகத் தலைவன் சயாசான் காலோன் ராஜா எனக் கைச்சாத்திட்டு 'இக்கலகம் பிரிட்டிஷாருக்கு விரோதமாகத்தான் நடைபெறுகிறதே யன்றி இங்கு வதியும் அன்னிய நாட்டினராகிய இந்தியர் சீனர்களைப் பாதிக்கா'தெனப் பகிரங்க அறிக்கை வெளியிட்டிருந்ததை அனைவரும் அறிவர். அவ்வறிக்கைக் கனுகுணமாகப் பல நாட்கள் வரையில் கலகச்சனியன் நம்மை வந்து பீடிக்கவில்லை. கலகம் முதலில் மலைப்பிரதேசமுள்ள ஜில்லாக்களில் நடைபெற்று வந்தது. அது சமவெளிகளிலும் வியாபிக்க அவசியமேற்பட்டது. பிரிட்டிஷாரை மாத்திரம் பாதிக்குமென்ற அறிக்கையைக்கண்ட பலரும் அவர்கள் அதற்குத் தகுந்த குற்றங்கள் இழைத்திருப்பதாக எண்ணக்கூடியது சகஜம். பிரிட்டிஷார் ஏராளமான பொருளை இந்நாட்டிலிருந்து வெளிப்படுத்தி நாட்டை வறுமைக்குள்ளாக்கினரென்றால், அக்குற்றம் நூற்றில் ஐந்து விகிதம் இந்தியரையும் சாரலாம்.

**இந்தியருக்கு விரோதமாகத் திரும்பியதேன்?**

இதற்கிடையில், இந்திய ராணுவப் போலீஸும் இந்தியத் துருப்புகளும் கலகக்காரர்களை அடக்க உபயோகிக்கப் பெற்றனர். இக்காரணத்திலேயே பர்மியர் இதுவரை நம் ஜோலிக்கு வராதிருந்தவர்கள் நம்மைத் துவேஷிக்கத் தலைப்பட்டார்கள். இவ்விதமே நடைபெறவேண்டுமென எண்ணிய ஒரு சாரார் மனோசிம்மதி யடைந்தனர். பர்மியதேச பாஷைப் பத்திரிகைகளும் இத்துவேஷத்தைத் தங்கு தடையில்லாமல் கேட்பாரின்றி வளர்த்துவந்தன. பொறுப்புள்ள அதிகாரிகளும் அதைத் தடுப்பது தங்கள் வேலை அல்லவெனப் பாராமுகங் காட்டலாயினர்; காட்டிவருகின்றனர். பர்மியர்களும் டாங்கோ, பக்கோ, ஹர்தவாடி, பியாப்பம், மியாங்மியா முதலிய ஜில்லாக்களில் இந்தியப் பூண்டை வேருடன் களைந்துவிட வேண்டுமெனக் கங்கணங்கட்டிக் கொண்டு சொல்லொணு அட்டூழியங்களும் மிருகச் செயல்களும் தாராளமாக நடத்திவருகின்றனர். நமக்குத் தகுதியான பாதுகாப்புதன் கொடுத்துக் காக்கவேண்டுமென மாகாண சர்க்காருக்கு நாம் பன்முறை எடுத்துக்காட்டி வற்புறுத்தியதுண்டு. இந்தியப் பத்திரிகைகளும் பெருத்த கூக்குரலிட்டன. ஆனல் நம்மனோர் நிலைமை மேலும் மேலும் சீர்கேடடைந்து ஆபத்தாகிவிட்டதென்பது உலகறிந்த இரகசியம். இந்தியா மந்திரியும் தெளிவாக அதை ஒத்துக்கொள்ளத்தான் செய்கிறார். பர்மியத் தலைவர்களோ நம்மவர் விஷயத்தைப்பற்றி ஒரு சிறிதும் கவலையெடுத்ததாகக் கூறமுடியாது.

**பர்மியர் பிளவுகள்.**

மாகாணம் இம்மாதிரி அலங்கோல நிலைமையிலிருக்கும்பொழுது பர்மியத் தலைவர்களோ பல கட்சியினராகவெளிக்கிளம்பி, பிரிவினை வேண்டுவோரென்றும், வேண்டாதோரென்றும், ஹோம்ரூல் உடனே வேண்டுமென்றும், சுய ஆட்சியே தமது இலட்சியமென்றும், பிரிட்டிஷ் குடியேற்றநாட்டு அந்தஸ்து அவசியமென்றும், அல்லாவிடில் அயர்லாந்து அந்தஸ்து அவசியமென்றும், அர்த்தமின்றிப் பிதற்றி ஆர்ப்பாட்டஞ் செய்து வருகின்றனர். அயர்லாந்து அந்தஸ்து வேண்டுமென வட ஓன்லைன் வட்ட மேஜை மாநாட்டில் கேட்டதை நோக்க, தாராவாடி மகாஜனங்கள் அயர்லாந்தினர் அனுஷ்டித்த முறைகளைக் கையாள நாட்டத்தில் ஆச்சரியமென்னவிருக்கிறது! வேறு சிலர் பகிஷ்காரமென்றும் ஒத்துழையாமை யென்றும் வீணே மிரட்டுகின்றனர். பௌத்தபிரானின் சீரிய கொள்கையாகிய அஹிம்சா தர்மத்துடன் கூடிய பரிசுத்த ஒத்துழையாமையைக் கைக்கொள்ள இந்த முன் கோபமுள்ள பர்மிய சகோதரர்கள் ஒரு சிறிதும் யோக்கியதை யுடையவர்களல்லவென நாம் ஏற்கனவே விளக்கியுள்ளோம். நாட்டிலுள்ளோர் யுத்த கோலத்துடனிருப்பதை அறிந்தும் அவர்களை அடக்காமலோ அன்றேல் ஒரு சமாதானத் திற்குக் கொண்டுவராமலோ பொறுப்புள்ள ஆட்சியை நிர்வகிக்கவேமென மார்தட்டி வெளிவரும் நமது பர்மியத் தலைவர்களுக்குக் கொஞ்சமேனும் வெட்கமில்லையா?

**சிறுபான்மைச் சமூகங்கள்.**

அது அவ்வாறாக, சிறிய பகுதியினராகிய ஐரோப்பியர்களும் இந்தியர்களும் சீனர்களும் அத்தலைவர்கள் அயர்லாந்தின் அந்தஸ்தை வகித்து நடத்துங்கால் என்கதியடைவார்களென்பதைத் தற்கால சம்பவங்களைப் படித்து வருவோர் நன்கு அறிவர். ஐரோப்பியர்களோ ஆளுஞ்சாதியினராயினும், அவர்களும் தத்தம் உயிரைக் கையில் பிடித்தே திரிகின்றனரென்பது வெளிப்படை. மலைப் பிரதேசங்களில் சிறந்த சிகரங்கள் கள்ளாவிக்கு உத்தரிக்கப்பட்டவரும் [illegible] சகல உத்பாதங்களும் செய்து வருவார்களாம்! [illegible] பர்மியர்களுக்கு இந்தியும் [illegible] லென்பதை [illegible] நடைபெற்ற சீனர்—பர்மியர் கலகத்தில் நாம் அறிந்தோம். அஹிம்சா தர்மத்தின் உருவாகிய நம் காந்தி மகானின் அடிச்சுவட்டைப் பின்பற்றும் நம்மனோர் நிலைதான் மிகுதியும் [illegible] மானதாயிருக்கிறது. பர்மாவில் நாம், எவ்விதம் கௌரவத்துடன் வாழ்நாட்களைக் கழிப்பதென்பதே இதுகால் முக்கியப் பிரச்னையாகும். அதைக்குறித்து இந்த வழியும் நாமே ஒரு முடிவிற்கு வரவேண்டியது அவசியமாகும். இந்தியாவிலுள்ள தலைவர்களின் உதவியை நாம் எதிர்பார்க்க முடியாது. அவர்களுக்கு அங்கே அநேகவித அலுவல்கள் இருக்கவே செய்கின்றன. அத்துடன் பர்மா நிலைமை இங்குள்ள நாமே நன்கு அறிவோம். சர்க்காரும் [illegible] விரும்பவரின் வார்த்தையைக் கேட்டே அனுசரிப்பது வழக்கம். காங்கிரஸ் மகாசபையும் அம்முறையைத்தான் கைக்கொண்டு வருகிறது. ஆகையால் நாம் இப்பொழுது செய்யவேண்டியது என்ன? பர்மாவில் சமூகத் துவேஷமும் ராஜ கலகமும் அறவே ஒழியும்வரையில் வேறெந்த முக்கிய விஷயத்தைப் பற்றியும் ஆலோசிக்க இடந்தரலாகாதென மாகாண சர்க்காரையும் இந்திய சர்க்காரையும் பிரிட்டிஷ் சர்க்காரையும் நம்மனோர் பலங்கொண்ட மட்டும் வற்புறுத்தி ஆட்சேபிக்கவேண்டும்.

**எப்படிச் சுய ஆட்சியை நடத்துவர்?**

இந்தியாவில் சமாதானத்தை ஸ்தாபிக்க மாபெரும் இந்தியத் தலைவர்கள் எவ்வளவு சிரத்தையெடுத் துழைக்கின்றனரோ, அவ்வாறே இங்குத் தலைவர்களென்று கூறி வெளிவரும் பர்மிய ஜனங்கள் தங்களுடைய சாய்மான நாற்காலிகளிலிருந்து வெளியேறிக் கலகத் தலைவர்களோடு கலந்து சமாதானத்தை நிலைநாட்டச் சக்தியில்லாவிட்டால், சுயஆட்சி நடத்த அவர்களுக்குத் தகுதி எங்கிருக்கிறதென அரசாங்[illegible]

(௯௨-ம் பக்கம் பார்க்க.)

## பர்மாவில் — — இந்தியர் நிலைமை.

(கூ-ம் பக்கத் தொடர்ச்சி.)

சர்க்கார் இடித்துக்காட்டவேண்டும். அது அவர்தம் முதற் கடமையாகும். அதிகாரப் பற்றற்ற பிரிட்டிஷாரும் அதைத் தங்களுடைய செல்வாக்கை உபயோகித்துத் தாங்கவேண்டும். நாமும் நம்மனோரின் உடல் பொருள் ஆவி மூன்றுக்கும் எதிர்காலத்தில் இப்பர்மியர்களால் எவ்வித ஆபத்தும் ஏற்படாதென பூரணத் திருப்தி ஏற்பட்டாலொழிய, அவர்களது கையில் மாகாண ஆட்சியை ஒப்படைக்கலாகாதென ஆட்சேபிக்கத் தயாராயிருக்கிறோம். இக்கைங்கர்யத்தில் நமது முழுப் பலத்தையும் பிரயோகிப்போம். சத்தியாக்கிரகம் ஒத்துழையாமை முதல் வரிகொடா இயக்கம் சட்டமறுப்பு ஈறாக அஹிம்சா தர்மத்தைக் கைக்கொண்டு சகல முறைகளையும் அனுஷ்டிக்கச் சித்தமாயிருக்கும் பர்மா வாழ் இந்தியர்களின் மனோநிலையை அறியும் நாம் சர்க்காருக்கும் பர்மியருக்கும் அதை தெரிவித்துக்கொள்ளாவிடில் நமது கடமையிலிருந்தும் தவறியவராவோம்.

### இந்தியர் இடையூறல்ல.

நமது தாய்நாட்டுக்குச் சர்வ சுதந்திரமும் வேண்டுமெனச் சகல தியாகங்களுஞ் செய்த நாம் பர்மியர்களுக்கு இடையூறாகயிருப்பதாக, எவரும் நினைத்துவிடலாகாது. அவர்களும் நம்போன்று விடுதலையடைய வேண்டுமென்பதே நமது போவா. அவ் விடுதலைக்கிளர்ச்சியில் பர்மாவாழ் இந்தியர்களும் காங்கிரஸ் மகாசபையும் ஈடுபட்டுழைத்தது கொஞ்சமல்ல. அதை எந்தவோர் பர்மியனும் மறக்கமுடியாது. அக்காரணத்தைக்கொண்டே ஆளுஞ்சாதியினர் இந்தியராகிய நம் மீது கசப்புகொண்டு பராமுகங் காட்டி வருகின்றனரென்பது வெள்ளிடைமலை. சமீப சம்பவங்களைக் காணும் நாம், தென்னாப்பிரிக்கா, கிழக்காப்பிரிக்கா ஆகிய இதர குடியேற்ற நாடுகளில் இந்தியர் நிலையை அனுபவத்தாலறிந்த நாம், இன்னும் நித்திரையிலிருந்துகொண்டு பட்டப்பகலில் கோட்டையை விட்டுவிட்டால் அது மன்னிக்கத்தகாத குற்றமாகும்.



## "இனம் கள்ளு."

சப் இன்ஸ்பெக்டர் சிபார்சு.

தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் திரு. சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் பத்திரிகைகளுக்கு விடுத்துள்ள ஓர் அறிக்கையில் பின்வரும் ஓர் விசித்திர நிகழ்ச்சியைக் கூறியிருக்கிறார்:—

கள்ளு சாராயக்கடை மறியல் நடக்கும் இடங்களிலிருந்து எனக்கு அறிக்கைகள் வந்துகொண்டிருக்கின்றன. அந்த அறிக்கைகளுள் ஒன்றில் காணப்படும் சம்பவத்தை எடுத்து ஊரும் பெயரும் மட்டும் குறிப்பிடாமல் எழுதியிருக்கிறேன். படிப்பதற்கு அது வேடிக்கையாகவேயிருக்கிறது. ஆனல், ஏழைகளின் கொடுமையை நினைக்கும்போது ஒரு புறம் துக்கமும் உண்டாகிறது.

போலீஸ் இன்ஸ்பெக்டர் மறியல் நடக்கும் கடைக்கு வந்து பார்வையிடுகிறார். அவருக்கும் கடைக்காரனுக்கும் சிறிது நேரம் சம்பாஷணை நடக்கிறது. பிறகு இன்ஸ்பெக்டர் பக்கத்திலுள்ள ஆதித்திராவிடர்களின் இருப்பிடத்துக்குச் செல்கிறார். [பாவம்! எல்லாவித அநியாயத்துக்கும் ஆதித் திராவிடர்கள்தாம் அகப்படுகிறார்கள்.] அங்கிருந்தவர்களைப் பார்த்து "பயப்பட வேண்டாம்! குடிப்பதற்கு வாருங்கள். நான் பார்த்துக்கொள்கிறேன்" என்கிறார்.

அவர்கள் தயங்கி நிற்பதைக் கண்ட இன்ஸ்பெக்டர் மறுபடியும் "காசுகொடுக்கவேண்டாம்; இன்னும் ௧௦ நாளைக்கு எல்லாருக்கும் இனமாகக் கள் வார்க்கச் செய்கிறேன். வாருங்கள்" என்கிறார். ஜாதிக் கட்டுப்பாடு ஏற்பட்டிருந்தபடியால் இப்போதும் யாரும் முன்வரவில்லை.

பிறகு, ஆதித் திராவிடர்களின் நாட்டாண்மைக்காரருக்கும், போலீஸ் இன்ஸ்பெக்டருக்கும் பின்வரும் சம்பாஷணை நடந்தது:—

இன்ஸ்பெக்டர்:-"என்னடா! நீங்கள் மண்வெட்டி பிடித்துக் கஷ்டமான வேலைகள் செய்கிறவர்களல்லவா? கள்ளுக் குடிக்காமல் உங்களுக்கு முடியுமா?"

நாட்டாண்மைக்காரர்:- "குடிப்பதற்குக் காசு எங்கே இருக்கிறது? ஜீவனத்துக்கே வழியில்லை. எங்களை ஏன் குடிக்கச் சொல்கிறீர்கள்? கள்ளினல் தான் கெட்டோமே."

இன்ஸ்பெக்டர்:-"அடே! இப்போதுதானே சொன்னேன் காசு வேண்டாமென்று! இனமாக ஊற்றச்சொல்கிறேன். காங்கிரஸ்காரர்கள் குடிக்க வேண்டாமென்று சொல்வார்கள். மீறிக் குடித்தால் அவர்கள் உங்களை ஒன்றும் செய்ய முடியாது. நான் இருக்கிறேன், வாருங்கள்"

நாட்டாண்மைக்காரர்:--"காங்கிரஸ்காரர்களிடம் எங்களுக்குப் பயமில்லை. நாங்கள் பிழைக்கத்தானே அவர்கள் வழி சொல்கிறார்கள். அவர்கள் சொல்லை மீறமாட்டோம்."

இன்ஸ்பெக்டர்:-"அந்தக் கதையெல்லாம் இருக்கட்டும், நிஜமாகச் சொல்லு; குடிக்கவேண்டுமென்ற ஆசை உனக்கில்லையா? உன் முகமே சொல்லுகிறதே?"

நாட்டாண்மைக்காரர்:-- "உங்களுக்கேன் இந்தக் கஷ்டம்? நாங்கள் ஜாதிக் கூட்டத்தில் குடிக்கக்கூடாதென்று தீர்மானம் செய்திருக்கிறோம்."

இன்ஸ்பெக்டர்:-"அடபைத்தியமே, சும்மாக் கிடைக்கும்போது குடிக்காமல் இருப்பார்களா? உனக்கிஷ்டமில்லாமற் போனல் மற்றவர்கள் குடிக்கட்டுமே? நீ ஏன் தடுக்கிறாய்?"

நாட்டாண்மைக்காரர்:-"ஆமாம்; நாங்கள் குடித்துக்கெட்டால் தானே, நீங்கள் மச்சுவீடு கட்டிக்கொள்ளலாம்?"

இச்சமயத்தில் மறியலை மீறிக் குடித்திருந்த ஓர் ஆதித் திராவிடன் கையில் அரிவாளும் கம்புமாக அங்கு ஓடிவந்தான். அவன் இன்ஸ்பெக்டரைப் பார்த்துச்சொல்கிறான்:-"எஜமான், நான் குடிப்பேன். இந்த நாட்டாண்மைக்காரன் சர்க்காருக்கு விரோதி. என்னைத்தடுக்க யாருக்கு அதிகாரம்? எனக்கு நோவு குடிக்காமல் முடியாது. இந்தக் காங்கிரஸ்காரர்கள் என்னை என்ன பண்ண முடியும்?"

இதற்குள் அவன் மனைவி அங்கே ஓடிவந்து, "இந்த அநியாயம் அடுக்குமா? குடித்துவிட்டு வந்து பெரிய மனிதர்களை மரியாதைக் குறைவாய்ப் பேசுகிறதா?" என்றாள்.

குடிகாரன் கையிலிருந்த கம்பை ஓங்கிக் கொண்டு அவளை அடிப்பதற்கு ஓடினன். அங்குள்ளவர்கள் அவனைத் தடுத்து நிறுத்தினர்கள். இன்ஸ்பெக்டரும் "அடே! சும்மாவிரு. பெண்சாதியை அடித்துப் போடாதே!" என்றார்.

பிறகு அவன், "ஐயோ, சாமி! இந்த ஊரில் எனக்கு எல்லாரும் விரோதிகள். என்னை அடித்து விடுவார்கள்; என் வீட்டில் தீ வைத்து விடுவார்கள்" என்று குடி வெறியில் உளறிக்கொண்டே போய்விட்டான். அவன் சொன்னதை யெல்லாம் இன்ஸ்பெக்டர் டைரியில் ஜாக்கிரதையாகக் குறித்துக்கொண்டு போனர்.

நமது உத்தியோகஸ்தர்களில் சிலர் இவ்வாறு காலத்தின் போக்கை அறிந்துகொள்ளாமல் நடந்துகொள்வது வருந்தத்தக்கதல்லவா? ஏழைகளின் விமோசனத்துக்கான இந்தப் புனித இயக்கத்தைத் தடை செய்வதில் இவர்களுக்கு ஏன் இவ்வளவு கவலையோ தெரியவில்லை! இதன் மூலம் சர்க்காரைத் தாங்குவதாக இவர்கள் நினைக்கிறார்கள்போலும்! தங்களுக்கில்லாத கடமைகளைத் தாங்களே மேற்போட்டுக் கொள்கிறார்கள். இந்த அறியாமையை என்னவென்று சொல்வது!





## பர்மாக் கலக — — உக்கிரகம்.

### சற்று நின்று மும்முரமாகிவிட்டது.

பர்மாக்கலகம் இன்னும் அடங்கியபாடில்லை. நடுவிற் சற்று அமைந்திருந்தாற்போல் தோன்றியது. ஆனல், இப்பொழுது மறுபடியும் கலகம், எல்லாப் பிரதேசங்களிலும் உக்கிரகமாக நடப்பதாகச்செய்திகள் எட்டுகின்றன. கலகக்காரர்கள் கொள்ளைகள் அடிக்கிறார்கள். சர்க்கார் தஸ்தவேஜிகளையும் வரி ரசீதுகளையும் அழிக்கிறார்கள். சென்ற வார நிகழ்ச்சிகளின் சாரம் வருமாறு:—

### தாயட் மியோ.

ஜுன்-மீ ௧௯-வயிலிருந்து ௨௩-வக்குள் தாயட்மியோ ௪௦ கலகக்காரர்கள் துப்பாக்கி, கத்தி முதலியவைகள் சகிதம் ௯ கிராமங்களைச்சுற்றிப் பணத்தையும் வரி ரசீதுகளையும் கொள்ளையிட்டனர். தாயட்மியோவில் மொத்தம் ௬ கொள்ளைகள் நடந்தன. தாயட்மியோவிற்கு மேற்கேயுள்ள நகர வெளிப்பிரதேசத்திலுள்ள ஓர்இந்தியரை ௨௫-௨ ௪௦ கலகக்காரர்கள் தாக்கி, அவர் மகர்வீட்டைச் சுட்டுக்கொன்றார்கள்.

### பாஸீன்.

பாஸீனில் ஒரு வீடு சூறையாடப்பட்டது. சொந்தக்காரர் கொல்லப்பட்டார்.

### பியாப்பம்.

பியாப்பத்தில் ௨௫-௨ ஒரு இந்தியர் குடிசையைக்கொள்ளையடித்ததுடன் தீயிட்டுக் கொளுத்திவிட்டனர்.

### டாங்கூ.

டாங்கூவிலும் ஓர் இந்தியர் குடிசை தீக்கிரையாக்கப்பட்டது.

### கியாகி.

கியாகிப் பிரதேசத்திலும் இந்தியருக்குச் சொந்தமான நிலத்தின் மீதிருந்த தோர் குடிசை கொளுத்தப்பட்டது.

### ஹென்ஸாடா.

ஹென்ஸாடா ஜில்லாவில் ஒரு கிராமாதிகாரியின் வீடு தாக்கப்பட்டு, ௪000 ரூபாய் பெறுமான சொத்துக்கள் கொள்ளையிடப்பட்டன. ஏழு இடங்களில் கொள்ளைகள் நடந்தன.

### புரோம்.

புரோமில் ஒருவர் கொலை செய்யப்பட்டாராம்.

### இன்சீன்.

இன்ஸீனில் ஜுன் ௨௪-௨ ஓர் இந்தியரைக் காலில் சுட்டுவிட்டார்கள். இந்தியர் வைக்கோற் போர்கள் சில கொளுத்தப்பட்டன.

### ரங்கூன் பாங்கி மாற்றம்.

ரங்கூனிலுள்ள தாசன் பாங்கியென்பது, விவசாய நிலங்கள்மீது பணம் கொடுத்து வந்தது. இப்போது அந்தப் பாங்கியைக் கலைத்து, ஓர் புதிய பாங்கியாக ஏற்படுத்திவிட்டார்கள். இதில் எவ்விதப்பணத்தையும் மாற்றிவிட ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

### கைதியானவர்.

பாஸீனில் சூறையாடியவரில் நான்குபேரும், ஹென்ஸாடாவில் கலகத்தலைவர் ஒருவரும், புரோமில் ௧௬ பேர்களும் கைது செய்யப்பட்டுளர்.

### சரண் புகுந்தவர்.

புரோமில் ௬௨ கலகக்கார் சரண் புகுந்தார்கள்.

### கல்கத்தாவில் கலைந்த கூட்டம்.

பர்மாக்கலகத்தைப்பற்றி விவாதிக்க, கல்கத்தாவில் உள்ள ஹாலிடே பார்க் என்ற பூங்காவனத்தில் ஓர் கூட்டம் ஜுன் ௨௫-௨ நடந்தது. கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தவர்கள் திரு. சென்குப்தாவைத் தலைமை வகிக்க அழைத்தார்கள். திரு. தேவானந்த தத்தர் என்பவருக்கும் அவரைச்சேர்ந்தவருக்கும் இது பிடிக்கவில்லை. குழப்பம் உண்டானது. திரு. சென்குப்தா கூட்டத்தை ... மறைத்து வெளியே வந்துவிட்டார்.

## குஸ்தியும் குத்துச்சண்டையும்.

### குஸ்தியின் மேன்மை விளக்கம்.

(சாண்டோ லெ. சோமசுந்தரன்.)

(முன் தொடர்ச்சி)

குஸ்திக்காரர் குத்துக்காருடைய காலைப் பிடிக்கக்கூடாது என்றாலும் கூட ஜெயம் குஸ்தி வித்தைக்குத்தான். குத்துக்காருடைய கை குஸ்திக்காரருக்கு அகப்பட்டு விட்டால் குத்துக்காரர் நிலைமை அபாயந்தான். குஸ்தி வித்தைக்கும் ஜுஜுட்சி வித்தைக்கும் எதிரி நெருங்கியிருந்தால்தான் ஜெயம். குத்துக்காருடைய தற்காப்பு முறையெல்லாம் எதிரியை அப்பால் விலக்கி வைத்துக்கொள்ளும் பொருட்டுக்குத்துவதற்குக் கைகளை நீட்டுவதுதான். நீட்டப்பட்ட கைகள் எதிரி கைகளில் பட்டால் அக் கைகளைப் பலனற்றுப் போகும்படிச்செய்ய எதிரி ஒருடஜன் வழிகளில் வேலை செய்வான்.

குத்துக்காரர் குஸ்திக்காரரை அழுத்தித் தன் கைகளை மீட்டுக் கொண்டாலும் அவருடைய குத்துகளெல்லாம் எதிரியிடத்தில் கொஞ்சமும் செல்லாது. ஏனென்றால், முதல்தரக்குஸ்திவஸ்தாதுகளின் தேகப்பரப்பு மிருகத்தின் தோல்களையொத்த வன்மைபெற்றிருக்கும். அவர்கள் ஆப்பிரிக்காக்கண்டத்துக் காட்டெருமைகளைப் போல நின்று சமர் புரிவர் அப்படியிருந்தால் தான் அவர்களுக்கு ஜெயம் கிடைக்கும்.

உண்மையாகவே ஒரு குத்துச் சண்டைக்காரர் ஒரு தேர்ந்த குஸ்திச் சண்டைக்காருடைய எடை இருப்பதில்லை. ஒண்டிக்கு ஒண்டிச் சண்டையில் குஸ்திப்பயில்வான் ஒருகழைக்கூத்தன்போல எந்த நிலைமையிலும் சமாளித்துக் கொள்வான். அவனுடைய தசைகளின் மிகைபட்ட உழைப்பே அவன் தொழிலுக்குரிய விசேட நற்பயனை அளிக்கிறது. குஸ்திக்காருடைய தசைகளுக்கு வெகுநேர மட்டும் விறைப்பு இருப்பது வழக்கம். ஆனல் குத்துக்காருக்கு அப்படியில்லை. அவர்களுடைய தசை சில நிமிடங்களுக்குக்கூட அந்நிலைமையினை அடைவதில்லை. சீக்கிரமே அத்தசைகள் சோர்வடைந்து விடுகின்றன. பலம்போட்டு இருவரும் போர்புரிந்தால், குத்துக்காருடைய தேகம் தன் பம் பொறுக்கமாட்டாமல் பணிந்துவிடும்.

சுருங்கக்கூறுமிடத்துக்குஸ்திப்பயில்வான்கள் குத்துப் பயில்வான்கள்மீது பிரயோகிக்க அநேகவிதமான முறைகளை வைத்திருக்கிறார்கள். ஆனல் குத்துப் பயில்வானிடம் குத்து வரிசைகள் தவிர வேறொரு கையிருப்புச் சரக்கும் கிடையாது குஸ்திக்காருடைய தேகம் முழுதும் காடுமுரடான அதாவது வயிரமுங் கணுவுங் கொண்ட மரத்தினை யொத்த உறுதி கொண்டிருக்கும். தேகத்தின் மேற்பரப்புப்பலமான டாய்தலுக்கும் பளுவுக்கும் சம்பந்தப்பட்டுக் கெட்டியாயிருக்கும். இத்தகைய மேலான அமைப்பையுடைய குஸ்திக்காரர்மீது விழும் குத்துகள் அவரைக் கொஞ்சமும் பாதிக்கா. குஸ்திப் பயில்வானுடைய கழுத்தும் குத்துப் பயில்வானுடைய கழுத்தைவிடப் பன்மடங்கு அதிகமான உறுதியினைக் கொண்டிருத்தல் இயல்பு. குஸ்திப் பயில்வானுடைய முகத்தில் குத்துவிழுந்தால் கூட அது தலையைத் தாக்கி ஒருவிதமான குழப்பத்தையும் உண்டாக்கமுடியாது. ஆனல் அத்தகைய குத்துகள் குத்துக்காரர் முகத்தில் விழுந்தால் அவர் பாடு அபாயகரமானதாகிவிடும்.

குஸ்தி—குத்து கைகலப்புச் சண்டையில் குத்துக்காரர் செய்வதெல்லாம் இரண்டு குத்துகளில் அடங்கும். ஒன்று நேரே எதிரியின் மோவாய்க்கட்டையைத் தாக்க வருவது; மற்றொன்று ஆகாயத்தில் தள்ளி மறைவது. பலமுள்ள குத்துக்காரர்களுடைய அத்தகைய குத்து எதிரியைப் பொறி கலங்கச் செய்து அவரை நித்திரையில் வீழ்த்திவிடும் என்பதில் சந்தேகமில்லை. ஆனல் அந்தக் குத்துத் தவறிவிட்டால் நீட்டிய கையை குஸ்தி பயில்வான் அப்படியே பிடித்து நெறித்து எதிரியை மேற்கொண்டுவிடுவான். குத்துப் பயில்வான், வயிற்றில் ஒரு குத்து விட்டால், அதனைத் தாங்கமுடியாது சாதாரணமாய் மற்றவர்கள் அப்படியே விழவேண்டியதுதான். ஆனல் குஸ்திப் பயில்வான்களுடைய வயிற்றுப் பிரதேசங்கள் இரும்புகளால் ஆன மடிப்புகள் போல இருப்பதால் எத்தனை குத்துகள் விழுந்தாலும் அவை லட்சியம் செய்வதில்லை: அங்குள்ள தசைகள் பயங்கரமான பருமனையும் முரட்டுத் தன்மையினையும் கொண்டவை. குஸ்திப் பயில்வான்கள் குஸ்தியின் பொருட்டுத்தங்கள் தேகத்தைப் பலவிதங்களில் நீட்டி முடக்கிப் பயின்று இருப்பதால், அத்தகைய தசைக் கட்டுகள் ஏற்பட்டிருக்கின்றன. குத்துச் சண்டையினைத் தற்காப்புக்குரிய வித்தை யென்று வைத்துக் கொண்டாலும் அத்தகைய வித்தையொன்றே தற்காப்புக்குப் போதுமானதெனக் கொள்ள முடியாது. பலவகை வித்தைகளில் குத்துவித்தை முதன்மையானது என்று சொல்லவும் முடியாது. குஸ்தியை அறியாத அதில் தேர்ச்சி பெறாத ஒருவனிடத்தில் மட்டும் குத்துவித்தை சாதாரணமாய்ச் செல்லக்கூடும். குத்துவித்தை ஆண்மை மிகுந்த சேர்த்தியான வித்தையேயானாலும் அது தெருச் சண்டைகளிலும் வழிப்பறிக்கொள்ளைக்காருடைய போராட்டத்திலும் நிர்ப்பந்தம் மிகுந்த அவசர சந்தர்ப்பங்களிலும் தற்காலக் குஸ்தி வித்தைபோல உதவக்கூடியதல்ல. ஆகவே, தற்காப்பு விஷயத்தில் குஸ்தி வித்தையை விடக் குத்துவித்தை மிகமிகத் தாழ்ந்ததென்றே சொல்லவேண்டும்.

### வியாசப் போட்டி.

வெள்ளிப் பதக்கம் பரிசு.

குறிப்பு: -அன்பர்களே! எல். ஈ. யுபாங்க்ஸ் என்பார் குத்து — குஸ்தி வித்தைகளில் நிபுணர். இவர் தற்காப்புக்குக்குத்துச்சண்டையைக் காட்டிலும் குஸ்திச் சண்டையே மேல் எனத் தம் கொள்கையை நிலைநிறுத்துகிறார். பல குத்துப் பயில்வான்களிடம் நேருக்கு நேராக நின்று சண்டையிட்டு அநுபவம் பெறுமல் இப்படிக் கூறத் துணிவாரா? ஆயினும், இவர் கூறுவதையே சரி யென்று நாம் கொள்ளலாமா? இத்துறைகளில் தேர்ச்சிபெற்ற பல குத்து—குஸ்திப் பயில்வான்கள் தங்கள் நோன அநுபவத்தை வெளியிட்டு உருசுப்பித்தால் அது மிகப் பயன்தரக் கூடியதாயிருக்கும். நமது நாட்டிளைஞர்கள் உடற்பாதுகாப்பு விஷயத்தில் அலட்சியமாயிருப்பதையும், தற்காப்புக்கு எவ்வித மான வித்தை நல்ல பயன்தரக்கூடியதென்று உணரவேண்டுமென்பதையும் கருதியே இச்சங்கையுள்ள கட்டுரையை வரையலானேன். இதற்குச் சரியான பதிலளிப்பது பொது அறிவுபடைத்தவர்கள் கடமை யென்றாலும், இக்கலையில் தேர்ச்சி பெற்ற குத்து—குஸ்திப் பயில்வான்களே சரியான அபிப்பிராயத்தினை வெளியிடத் தகுந்தவர்கள். ஆதலால், சென்ற வாரத்து 'ஊழிய'னில் இதுபற்றிய அபிப்பிராயங்களை ௩௦-௬-௩௧-க்குள் தெரிவிக்க வேண்டுமென எழுதியிருந்தேன். யோசித்தெழுதப் பலருக்கும் சௌகரியமாயிருக்கும் பொருட்டு அதிகமாக இன்னும் ஒருவாரச் சாவகாசம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதாவது ௭-௭-௩௧-க்குள் சுருக்கமாகவும் தெளிவாகவும் "குஸ்தி எதனல் உயர்ந்தது? குத்து எதனல் தாழ்ந்தது" என்ற குறிப்புடன் தெளிவாக எழுதிவரும் கட்டுரைக்கு முன்னர் அறிவித்தபடி வெள்ளிப் பதக்கம் பரிசளிக்கப்படும். கட்டுரைகளைக் கீழ்க்கண்ட விலாஸத்திற்கு அனுப்பவேண்டும்.

காரியதரிசி,
உடற்பயிற்சிச்சாலை,
மேலச் செவற்பட்டி.

## போர்டு கார் — — அபிவிருத்தி.

### துருப்பிடிக்காத முறை.

ஏற்கனவே தங்கள் சாதுரியமான மதிப்பை போர்டு மோட்டார் கம்பெனியார் இப்பொழுது உயர்த்திக்கொள்ள முயன்று வருகின்றனர். சிறந்த ... செட்டுப்போகக்கூடிய பாகங்களான ... ... பெண்டர்கள், ... ... கள், முன்புற ... ... ... விளக்கு பிராக்கெட், ... ... மறைவுகளும், ... துருப்பிடிக்காதபடி ஒரு ... முறையில் தயாரிக்கப்படுகின்றன. ... ... ... டாலும், பின்னர் இத்தகைய ... பாகங்கள் துருப்பிடித்து, ... பாகங்களையும் நிறமிழக்கின்றன. ... யாகக் காரைப் பார்ப்பதற்கே விகாரமாயிருக்கிறது. இதைத் தடுக்கவே இந்தப் புதிய முறை அநுஷ்டிக்கப்படுகின்றது. இதற்கு "பாண்டரைஸ்டு முறை" என்று பெயர். போர்டுகாரின் வெளிப்புறப்பாகங்கள் துருப்பிடிக்காத முறையில் செய்யப்படுகின்றன.

### கதராடை அணிந்த மணமக்கள்.

தேவகோட்டையில் வைகாசி மீ இருபத்தி ஐந்தாம் நாள் நடந்த திரு. ஈ. ஷண்முகன் அவர்களின் கலியாணத்தில் மணமக்கள் கதருடையே அணிந்திருந்தனர்.

கல்யாணத்தில் வெகுமை திரு. ... தய்யா பிள்ளை யவர்கள் "... அன்புமிலை" என்னும் பொருள்பற்றி மிக அழகாக விரிவுரை நிகழ்த்தினர்கள். பின்னர் மணமகனுகிய ஈ. சண்முகன் அவர்கள் "கதராடை" "நாட்டின் நிலைமை" என்னும் பொருள்கள் பற்றியும் மிக நன்கு விரிவுரை நிகழ்த்தியபின் வந்திருந்தோர்க்கு வாழ்த்துக் கூறவும் இந்நாள் ... பாடசாலை பெண்மாணவிகளால் தேசியகீதம் பாடவும் கூட்டம் இனிது நிறைவெய்தியது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

Reg No 1509. (16 Page.) Tel : "Oolian."

# ஊழியன்

SUBSCRIPTIONS : Annual subscription Rs. Half yearly „ Rs. Foreign, Annual „ Rs.

ADVERTISEMENTS : One inch, S. C, per insertion As 8 Court Notices, per inch Re 1 Long standing advertisements given some aleon.

The "Oolian," a Nationalist Weekly.

Editor : Raya. Chockalingan.

Truth Persists. Service Shin

Vol. XI. Karaikudi—Tuesday, 30th June 1931. No. 34.



காரைக்குடி "ஊழியன்" அச்சுக்கூடத்தில் ஆர். ஆராவமுதனால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது

